# *Ūḻiyaṉ*

*Malar 19, itaḻ 29*

*January 18, 1940*

Record no. 148

REG. NO. M. 3888 | 12 பக்கங்கள் | விலை அணா ஒன்று

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

விளம்பர விகிதம்
அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
சிறிமன்ற விளம்பரம் அங்.1-க்கு 1—0—0
ஒப்பந்த விளம்பரத்திற்கு மானேஜருக்கு எழுதவும்

# ஊழியன்

(தேசிய வாரப் பத்திரிகை)

வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 19 | காரைக்குடி, பிரமாதி௵ தைமீ 5வ. வியாழன் (18—1—1940) | இதழ் 29

## காங்கிரஸ் மாளிகை நிதி

காங்கிரஸ்மாளிகையைப் புதுப்பிப்பதற்காகச்சென்ற வாரத்தில் 'ஹிந்து' பத்திரிகாலயத்தில் கிடைத்துள்ள நன்கொடை விபரம் வருமாறு:

| | ரூ. | அ. |
|---|---|---|
| மெசர்ஸ் சாரி அண்ட் ராம் | 1000 | |
| டி. டி. கிருஷ்ணமாச்சாரி காரியாலயத்தார் | 102 | |
| எம். ஸி. சுந்தரராஜன் கம்பெனி | 101 | |
| டி. ஆர். என். சாமி | 101 | |
| எம். கே. கிருஷ்ண செட்டி (அசோகா பாக்குத்தூள்) | 101 | |
| சர் மிர்சா இஸ்மாயில் | 100 | |
| ராம்லால் கம்பெனி | 100 | |
| செண்ட் தாமஸ் ஹால் மாணவர்கள் (தாம்பரம் கிறிஸ்டியன் காலேஜ்) | 65 | |
| எம். எஸ். கிருஷ்ணமூர்த்தியும், ஜகந்நாதனும் (ஆடிட்டர்கள்) | 50 | |
| கே. டி. ருக்மணி, நடிகை | 50 | |
| என். ராமச்சந்திர ராவ், மதுரை | 30 | |
| கே. ஜாகோப் ஜாயி | 25 | |
| முசிரி சுப்பிரமண்ய அய்யர் | 25 | |
| ஆர். சேஷாத்ரியும், எம். என். ராஜகோபாலனும் (மதுராந்தகம்) | 25 | |
| பி. கிருஷ்ணமூர்த்தி ராவ் | 25 | |
| பெயர் வெளியிட விரும்பாதவர் | 25 | |
| சென்னை வக்கீல்கள் சங்கம் (முதல் முறை) | 25 | |
| அரண்மனைக்காரத் தெரு, ஒரு வியாபார ஸ்தல ஊழியர்கள் | 22 | 13 |
| செகண்டராபாட் மெட்ராஸ் லாட்ஜ் | 16 | |
| பாரத் கபே, மாம்பலம் | 15 | |
| நகரத்தார் மாணவர், திருச்சி | 11 | 4 |
| கும்பகோனம் பட்ராசார் தெரு வாலிபர்கள் | 10 | 4 |
| எஸ். ராஜகோபாலாச்சாரியார் கம்மெனி | 10 | |
| பாரத் லஞ்ச்ஹோம், மைலாப்பூர் | 10 | |
| மூர்த்தி கம்பெனி, பெங்களூர் | 10 | |
| டாட்டா ஹான்னப்பா அண்ட் சன்ஸ் பெங்களூர் | 10 | |
| கே. ராமய்யர் பிரதர்ஸ் | 10 | |
| ராமகிருஷ்ண விவேகானந்த சங்கம், காரைக்குடி | 10 | |
| பி. ஏ. ரங்காச்சாரியார் | 5 | |
| ஏ. கோபிச் சந்த் | 5 | |
| சி. வி. ஆராவமுதன் | 5 | |
| டாக்டர் எம். வி. நடேசன், மதுரை | 5 | |
| மதுரை டாக்டர் எம். சுப்ரமண்யம் | 2 | |
| கே. ஏ. நடேசய்யர் | 1 | |
| கே. ஏ. துரைசாமி அய்யர் | 1 | |
| டாக்டர் எஸ். ராமச்சந்திரன் | 1 | |
| ஆர். பட்டாபிராமன் கும்பகோணம் | 1 | |
| ஜி. டி. கிருஷ்ணமூர்த்தி புதுப்பாளையம் | 1 | |
| எஸ். சுந்தரராஜ அய்யங்கார், மதுரை | 1 | |
| ஒரு ரூபாய்க்குக் குறைந்த வசூல் | | 4 |
| | 2113 | 9 |
| ஏற்கனவே வசூலான தொகை | 6842 | 12 |
| மொத்தம் | 8956 | 5 |

## காரைக்குடியில் ஊர்வலம்

### நாட்டார்களுள் கக்ஷி

### மாட்டுப்பொங்கல் மரியாதை

காரைக்குடி பிரபல நாட்டாரான ஸ்ரீ மெ. கு. மெய்யப்பன் சேர்வைகாரருக்காக மதுரை அட்வகேட் ஆர். கல்யாணசுந்தரமய்யர் ராமனுதபுரம் ஜில்லா கலக்டருக்கு அவரை மாட்டுப்பொங்கல் தினத்தன்று காரைக்குடி கொப்புடையநாயகி அம்மன் கோவிலில் முதல் மரியாதை பெற்று கோவில் மேளங்களுடன் ஊர்வலமாக அவர் வீட்டுக்குப் போக அனுமதியளிக்க வேண்டுமென்று மனுச் செய்ததின் பேரில் அனுமதியளித்தார். இந்த ஊர்வலமானது காரைக்குடி நாட்டார்களுக்குள் கக்ஷியினால் பல வருஷங்கள் 144 உத்தரவால் தடைப்பட்டு நின்றிருந்தது. இந்த ஊர்வல விவகாரம் பலதடவை சிவில், கிரிமினல் கோர்ட்டுகளிலும், ஹிந்துமத போர்டிலும், ஹைகோர்ட்டிலும் இரு கக்ஷியாருக்கும் நடந்தது. ஹைகோர்ட்டார் மெய்யப்பன் சேர்வைகாரருக்கு ஊர்வலபாத்திய முண்டென்று கூறியதால் கலெக்டர் உத்தரவில் தான் அனுமதி கொடுப்பதாக உத்தரவிட்டதின் பேரில் சிவகங்கை டெப்டி சூபரண்டு ராவ்சாகிப் அப்பாதுரை நேரிலிருந்து, கவனித்து ஒருவித இடையூறன்னியில் ஊர்வலத்தை நடத்தி வைத்தார். பந்தோபஸ்துக்குப் போலீஸ் ரிஸர்வ் படை வந்திருந்தது. தேவகோட்டை சப்கலெக்டரும்திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்ரேட்டும் பாதுகாப்புக்கு வந்திருந்தனர். திரளான ஜனங்கள் ஊர்வலத்தைபார்த்தனர். எதிர்க்கக்ஷியார் ஊர்வலத்தைத்தடுக்கக்கூடாதென்றுதிருப்பத்தூர்தாலூகா மாஜிஸ்ரேட் 144 தடை உத்திரவு போட்டிருந்தார். மனுதாருக்குக் கலெக்டர் கோர்ட்டில் மதுரை அட்வகேட் ஆர். கல்யாணசுந்தரமய்யர் ஆஜரானர்.

—

## புதுக்கோட்டை நகரசபையில் பெண் அங்கத்தினர்

புதுக்கோட்டை முனிசிபாலிடி ஏற்பட்டு 25 வருடங்களாகின்றன. இதுவரையில் இல்லாமல் இப்போது பெண்கள் பிரதிநிதிக்காக ஒரு ஸ்தானமும் முஸ்லீம்களுக்காக ஒரு ஸ்தானமும் ஒதுக்கப்பட்டு முறையே ஸ்ரீமதி அலமேலுவும் நூர் முகமத் ராவுத்தரும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டு அங்கத்தினராகியுள்ளனர்.

—

## ஆசிரியர் மீது அவதூறு வழக்கு

பலவான்குடி ஸ்ரீ கும. சு. குமரப்ப செட்டியார் தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் சிவநேசன் பத்திரிகையில் தம்மைப் பற்றி 1—10—39ல் வெளியான பத்திரிகையில் (46)ம் பக்கத்தில் கண்டிருக்கிற அறிவுச் சுடர் ஆசிரியப்பா தன்னை இழிவாகப் பாடியிருப்பதாக சிவநேசன் ஆசிரியர் மீது தொடர்ந்திருந்த அவதூறு வழக்கு 15—1—40 விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு வாதியான கும. சு. குமரப்ப செட்டியாரையும், அவர் தரப்பில் சாக்ஷியான லால்குடி போர்டு ஹைஸ்கூல் தமிழ் ஆசிரியர் சரவண முதலியார்–1. போர்டு ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் குமாரவீரய்யர்–2. அரியக்குடி வயி. ராம. கி. கிருஷ்ணன் செட்டியார்–3. காரைக்குடி எம். எ. எஸ். எ. சுப்பையா செட்டியார்–4. இந்த நான்கு பேர்களையும் சாக்ஷிகளாக விசாரித்த பின் எதிரியின் வாக்கு மூலம் வாங்கப்பட்டு ஐ. பி. ஸி. 500, 501, செக்ஷன்களின்படி மறுவிசாரணைக்கு இம் மாதம் 25வ திருப்பத்தூர் முகாமில் வாயிதா ஏற்பட்டிருக்கிறது. வாதிக்காக மதுரை அட்வொகேட் எஸ். சோமசுந்தர பாரதியும் தேவகோட்டை அட்வொகேட் எஸ். எல். பாரதியும், எதிரிக்காக தேவகோட்டை வக்கீல் ஆர். கிருஷ்ணய்யங்காரும் ஆஜரானர்கள்.

—

## தேவகோட்டை

### சரஸ்வதி வாசகசாலை

திரு ஆர். எம். எஸ். எம். கதிரேசனர் தலைமையில் திருவாளர்கள் என். அண்ணமலை, டி. ஆர். அருணசலன் வி. இரமநாதன், ராமசம்பந்தம் ஆகியோர் முறையே தமிழ்நாட்டின் தற்போதைய நிலை, வில்லின் செல்வன், செல்வம், செயலில்செய்யுங்கள் என்னும் பொருள் குறித்துப் பேசினர்கள். திரு கரு. மாணிக்கம் நன்றி கூறினர்.

14—1—40 ஞாயிறன்று மாலை தியாகராஜ சுவாமி உத்சவம் வாசகசாலைக் கட்டிடத்தில் கொண்டாடப் பெற்றது. காளீஸ்வர பாகவதர் வாய்ப்பாட்டு, செல்லமய்யங்கார் பிடில், ராமானுஜ அய்யங்கார் மிருதங்கம் ஆகிய சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. திரு மெ. சி. மாணிக்கவாசகம் வித்வான்களைப் பாராட்டிப் பேசினர்.

—

அகில இந்தியத் தொழிலாளர் காங்கிரஸின் 18வது மகாநாடு மார்ச் மாத 3 வது வாரத்தில் பம்பாயில் நடைபெறும்.

* *

காங்கிரஸ் அக்ராசனர் பாட்னுவுக்கு வரும்போது ரூ 5000 பணமுடிப்பு தருவதென்று அங்குள்ள ஊழியர்கள் தீர்மானித்துள்ளனர்.

* *

ஹிட்லருக்குச் சாப்பாடு தயாரிப்பதற்காக அரசியல் விவகாரம் தெரியாத ஒரு கிழவியை ஹிட்லர் கண்டுபிடித்திருக்கிறார்.

* *

சேலம் முனிசிபாலிடியில், இனிமேல் சேர்மனை மேயர் என்றும் வைஸ் சேர்மனை டிப்டிமேயர் என்றும் அழைக்கவேண்டுமென ஒரு தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

* *

பெர்லின் ரேடியோவிலிருந்து தினமும் ஒருவர் ஹிந்துஸ்தானியில் பேசுவதைக் கேட்கலாம். பேசுகிறவர் பெயர் டாக்டர் பருக்கியாம். ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்தவரென்றும் சொல்லப்படுகிறது.

* *

காண்டா மிருகத்தின் கொம்பு மனித ஆயுளை விருத்திசெய்யும் தன்மையைப் பெற்றிருக்கிறதாம். இதற்காகவே சீனுவில் இக்கொம்புகளைப் பொடி பண்ணி, நாசிகாசூர்ணம்போல் உறிஞ்சுகிறார்களாம்.

* *

லண்டனில் சுமார் 60 பேர்இந்தியக் காங்கிரஸில் அங்கத்தினராய்ச் சேர்ந்திருக்கின்றனர். அங்கத்தினர் புத்தகம் இல்லாததால் இன்னும் அனேகரைச் சேர்க்கவில்லை. இந்தியரை மணந்துள்ள ஆங்கிலப் பெண்கள் இந்தியக் காங்கிரஸில் அங்கத்தினராகலாமா என்றும் அ. இ. கா. கா. கமிட்டியைக் கேட்டிருக்கிறார்கள். கொள்கையை ஒப்புக்கொள்ளும் எவரும் சேரலாம் எனப் பதில் அனுப்பப்படும்.

* *

பீகார் சோஷலிஸ்ட்டுகள் சுதந்திர தினத்தைக் கொண்டாடுகிற விதமே நூதனமாயிருக்கும். மாகாணமெங்கும் விவசாயிகள் ஆர்ப்பாட்டம், மாணவர் தொழிலாளர் ஸ்ட்ரைக், சுதந்திர தினத்துக்கு முன் ஒரு வாரம் முழுதும் கூட்டங்கள் கொடி விற்பனை ஆகியவை நடக்கும். சுதந்திர தினத்தன்று பிரதிக்ஞையிலிருந்து சர்க்கார் பிரிவை நீக்கிவிட்டுப் பிரமாணமெடுத்துக்கொள்வார்கள்.

—

Best copy available

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

## திருச்சி ரேடியோ

### ஜன. 18-உ வியாழன்

5-20 ஸ்ரீமதி ஜி. கல்யாண ராமன் வாய்ப்பாட்டு, 6-30 எஸ். எஸ். கே. வெங்கட்ராமையர்-வாய்ப்பாட்டு, 7-00 'அவ்வளவு சலிப்புத் தரத்தக்கதல்ல அச்சுப்பிழை திருத்தாளர் தொழில்' வி. என். ரங்கசாமி ஐயங்கார் பேசுவார், 7-50 தேசமங்கலம் சுப்ரமண்ய ஐயர்-வீணை, 8-30 'பொருமைச் சக்கரம்' ஒரு தமிழ் நாடகம் ஸி. ஆர். மயிலேரு எழுதியது. 8 45 ஸ்ரீமதி ஜெயம் சுப்ரமண்யம்-வாய்ப்பாட்டு 9-20 செய்திகள், 9-45 தேசமங்கலம் சுப்ரமண்ய ஐயர்.

### 19-உ வெள்ளி

5.20 ஸ்ரீமதி வி. சுப்புலக்ஷ்மி வாய்ப்பாட்டு, 6-30 பி. என். அங்கப்ப பிள்ளை-நாகசுரம், 7-50 பி. என். அங்கப்பபிள்ளை, 8-45 ஸ்ரீமதி வி. சுப்புலக்ஷ்மி-வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள், 9-45 ஸ்ரீமதி கிரனூர் எஸ். விஜயலக்ஷ்மி-புல்லாங்குழல்.

### 20-உ சனி

5-20 எட்டையாபுரம் ராஜகோபால பாகவதர்-வாய்ப்பாட்டு, 6-30 குமாரி சூடாமணி-வாய்ப்பாட்டு, 7-50 எம். எம். தண்டபாணி தேசிகர்-வாய்ப்பாட்டு, 8-30 சாமாசாஸ்திரி ஞாபகார்த்தமாக ஸ்ரீமதி டி. லக்ஷ்மிரத்னம்மாள்-வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள், 9-45 எம். எம். தண்டபாணி தேசிகர்.

### 21-உ ஞாயிறு

5-20 ஸ்ரீமதி அனந்தலக்ஷ்மி—வாய்ப்பாட்டு, 7-0 'போல்ஷிவிக்' பேச்சு, 7-50 'ம்ருச்சகடிகா' ஒரு தமிழ்நாடகம், சாருதத்தன் பி. எஸ். கிருஷ்ணசாமி, வசந்தசேனை ஸ்ரீமதி லலிதா. 9-20 செய்திகள், 9-45 வி. வி. சடகோபன்-வாய்ப்பாட்டு.

### 22-உ திங்கள்

5-20 என். எஸ். ராஜண்ணப் பிள்ளை-நாகசுரம், 6-30 ஸ்ரீமதி ஜி. விசாலாக்ஷி-வீணையும் - வாய்ப்பாட்டும், 7-00 ஒழுங்கான பொருளாதாரம்:-விளைவு எல். என். கோவிந்தராஜன் பேசுவார், 7-50 என். எஸ். ராஜண்ணப் பிள்ளை, 8-45 டி. வைத்யநாதையர் — வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள், 9-45 ஸ்ரீமதி ஜி. விசாலாக்ஷி.

### 23-உ செவ்வாய்

5-20 ஸ்ரீமதி ஹம்ஸவல்லி-வாய்ப்பாட்டு, 6-30 பல்லடம் சஞ்சீவிராவ்-புல்லாங்குழல், 7-50 கே. ஜி. வி. சுப்பு-வாய்ப்பாட்டு, 8-30 'யோகஜாதகம்' ஒரு தமிழ்நாடகம் எழுதியது கே. லக்ஷ்மிநாராயணன்-8-45 ஸ்ரீமதி ஹம்ஸவல்லி, 9-20 செய்திகள், 9-45 பல்லடம் சஞ்சீவிராவ்.

### 24-உ புதன்

5-20 ஸ்ரீமதி பங்களூர் நாகரத்னம்மாள்-வாய்ப்பாட்டு, சிவசுப்ரமணிய ஐயர்-பிடில், 7-0 'மனிதன் சக்தி' டி. தேசிகாச்சாரியார் பேசுவார், 7-50 கச்சேரி–சித்தூர் சுப்ரமண்ய பிள்ளை வாய்ப்பாட்டு, பி. கே. விஸ்வநாத சர்மா-பிடில், பழனி சுப்ரமண்ய பிள்ளை-மிருதங்கம்; 9-20 செய்திகள், 9-45 ஆர். கிருஷ்ணன் தம்பி-வீணை.

## தேவகோட்டை

### ஐக்கிய சங்கம்

சொற்பொழிவுக் கூட்டம் திரு. ஆர். எம். எஸ். எம். கதிரேசனர் தலைமையில் 11—1—40 நடைபெற்றது. சுப. மெய்யப்பன் நாட்டு வணக்கம் பாட, திரு. சித. லெட்சுமணன், ராம. அருணசலம், மு. வெ. சொக்கலிங்கம், பழ. வள்ளியப்பன், ஈா. அண்ணமலை, கே. கூராண்டான், ராம. சத்தினதன் முதலியவர்கள் அப்பர், ஒற்றுமை, பாரதியார், பரதனும் குகனும், பாரதி பகன்ற வீரப்பாக்கள், தேகப் பயிற்சி, இளைஞர்களின் கடமை என்பன பற்றிப் பேசினர்கள். தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் இரவு 8-30 மணிக்கு முடிவடைந்தது.

ஷை சங்கத்தின் 2-வது கிராமப் பிரசாரக்கூட்டம் 7—1—40 அன்று செம்பொன்மாரி என்னும் கிராமத்தில் நடைபெற்றது. மாலை 4முதல் 5வரை சேரிகளைச் சுற்றிப்பார்த்தனர். 5 மணிக்கு திரு. 'கா. அண்ணமலை அவர்கள் தலைமையில் பல அன்பர்கள் பேசினர்கள். இரவு 8 மணிக்குக் கூட்டம் முடிந்ததீ எனக் காரியதரிசி அறிவிக்கிருர்.

## சென்னை ரேடியோ

### ஜன. 18-உ வியாழன்

5-20 கிவலூர் எஸ். மீனக்ஷிசுந்தரம் பிள்ளை வாய்ப்பாட்டு, 7-50 ஸ்ரீமதி ஸி. சரஸ்வதிபாய் வாய்ப்பாட்டு, 9-40 ஸ்ரீமதி சுந்தர காமாக்ஷி-வாய்ப்பாட்டு,

### 19-உ வெள்ளி

4-06 "டாக்டர் ஜான்ஸன்" எஸ். ஸ்ரீனிவாஸராவ் பேச்சு, 5-00 ஸ்ரீமதி ஆர். பிரஹதாம்பாள்-வாய்ப்பாட்டு, 5-20 திருவீழிமழலை சகோதரர்கள்-நாகசுரம், 7-50 திருவீழிமழலை சகோதரர்கள், 8-25 ஸ்ரீமதி ஸி. எஸ். ராஜமும், ஜி. எஸ். விஜயராவும்-இருவர் பாடும் இசைப்பாட்டு, 8-35 பிரேமானந்த வாத்யக் கோஷ்டி,

### 20-உ சனி

5-0 சுந்தரமூர்த்தி ஓதுவார்—வாய்ப்பாட்டு, 5-20 சுந்தரமூர்த்தி, ஓதுவார் 6-45 'நூர்ஜஹான்' ஒரு தமிழ் நாடகம், எம். என். எம். பாவலர் தயாரித்தது 7-50 சாமாசாஸ்திரி ஞாபகார்த்தமாக முசிரி சுப்ரமணியய்யர்- சாமாசாஸ்திரி கிருதிகள்.

### 21-உ ஞாயிறு

4-00 எம். ஆபிரஹாம் பாகவதர் வாய்ப்பாட்டு, 5-20 புதுக்கோட்டை பி. வி. சுப்பிரமணியய்யர் வாய்ப்பாட்டு, 6-05 ஸ்ரீமதி ராஜம் புஷ்பவனம் வாய்ப்பாட்டு, 6-45 எல். சுப்ரமணிய சாஸ்திரி-வீணை 7-50 பாலக்காடு ராமபாகவதர் வாய்ப்பாட்டு, 9-30 ஸ்ரீமதி ராஜம் புஷ்பவனம் 10-0 எல். சுப்ரமண்ய சாஸ்திரி.

### 22-உ திங்கள்

4-06 ரப்பரின் கதை- ஒய். பாஸ்கரன் தமிழில் பேசுவார், 6-45 ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் வாய்ப்பாட்டு, 7-05 'அடால்வ் ஹிட்லர்' ஏ. ஜி. வெங்கடாச்சாரி தமிழில் பேசுவார், 7-50 எஸ். ராமச்சந்தர சாஸ்திரி புல்லாங்குழல், 8-10 ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள்.

### 23-உ செவ்வாய்

5-20 ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி உத்சவம் முதல்நாள் கர்நாடக வாத்யக் கோஷ்டி-ஸ்வாமிகளின் திவ்யநாமங்கள், ஸ்ரீமதி ராஜம்-வாய்ப்பாட்டுடன், 5-20 பிச்சக் கண்ணு சகோதரர்கள்-நாதசுரம், 6-45 முசிரி சுப்ரமண்யய்யர் வாய்ப்பாட்டு, 7-50 முசிரி சுப்ரமண்யய்யர், 10-0 ஸ்ரீமதி ராமதிலகம்மாள் வாய்ப்பாட்டு.

### 24-உ புதன்

ஸ்ரீ தியாகராஜஸ்வாமி உத்சவம் 2-வது நாள்-5-00 ஸ்ரீமதி ஸி. எச். லக்ஷ்மிராஜ்யம் வாய்ப்பாட்டு வாத்தியக் கோஷ்டியுடன், 5-20 டி. சரஸ்வதி வாய்ப்பாட்டு, 6-05 ஸ்ரீமதி ஸி. எச். லக்ஷ்மி ராஜ்யம், 6-45 மஹாராஜபுரம் விஸ்வநாதய்யர் வாய்ப்பாட்டு, 7-50 மஹாராஜபுரம் விஸ்வநாதய்யர், 9-30 கரூர் சின்னசாமி அய்யர்-பிடில்.

## காரைக்குடி நகரக் காங்கிரஸ்

12-1-40உ மாலை நகரக் காங்கிரஸ் கமிட்டியின் முதலாவது அவசரக் கூட்டம் தலைவர் ஸ்ரீ ஆறு ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

ஸ்ரீ லாலா ஷாம்லால் மரணமடைந்தது குறித்து அநுதாபம் தெரிவித்தும் சென்னை அகில இந்தியப் பொருட்காட்சியும், காங்கிரஸ் மாளிகையும் தீக்கிரையானதுபற்றியும், துருக்கி பூகம்பத்தால் உண்டான நஷ்டத்தைக் குறித்தும் மூன்று அனுதாபத் தீர்மானங்கள் நிறைவேறின; ஏகமானதாக. அவசரக்கூட்டம் இத்துடன் முடிந்தது.

## தொண்டி

### பஞ்சாயத்துப் போர்டு

10-1-40 புதன்கிழமை காலை 11மணிக்கு தொண்டியில், திருவாடானை டெபுடி தாசில்தார் தலைமையில் நடந்த விசேஷக்கூட்டத்தில் ஜனப், மு. ரு. பீ. செய்யதுமுகம்மது சாகிபு தொண்டி பஞ்சாயத்து போர்டு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## யுத்தத்தின் மூல காரணம்

### மார்க்கெட்டும் முதலாளிகளும்

பர்ஞர்ட் ஷா விளக்கம்

சென்ற மகா யுத்தத்தைப்பற்றி பேராசிரியர் பர்ஞர்ட் ஷா கூறியுள்ளதாவது:

அந்தப் பயங்கர யுத்தம் முதலாளிகளிடையேதான் ஏற்பட்டது. இங்கிலாந்து, பிரான்சு, இத்தாலி ஆகிய தேசங்களின் முதலாளிகள் ஒரு பக்கமும் ஜர்மானிய முதலாளிகள் மறு பக்கமுமாகப் பிரிந்து, அவர்களுக்குள் மூண்ட யுத்தம் அது. ஆப்ரிக்க மார்க்கெட்டுகள் சம்பந்தமாக இம்முதலாளிகளுக்குள் தகராறு கிளம்பிற்று. அத்தகராறுதான் கடந்த மகா யுத்தம்.

ஆனல் வெளிக்குப் பல சம்பவங்கள் சொல்லப்பட்டன. சர்பியாவைப் பிடிப்பதற்காக ஆர்ச்டியூக் கொலை விஷயத்தை ஆஸ்ட்ரியா பிரஸ்தாபித்தது. இதைத் தடுப்பதற்காக ருஷ்யா படை திரட்டிற்று. இந்த ஆஸ்ட்ரிய-ருஷ்யத் தகராறில், ஏற்கனவே ருஷ்யாவுடன் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்ததால், ஜர்மெனி தலையிடவாரம்பித்தது. இதேபோல் ருஷ்யாவுடன் ஒப்பந்தமிருந்ததால் பிரான்சு எதிர்க்கட்சியில் சேர்ந்தது. ருஷ்யத் துருப்புகள் வந்துவிடுமுன் ஜர்மென் துருப்புகள் அவசர அவசரமாகப் பிரெஞ்சுத் துருப்புகளை முறியடிக்க உள்ளே பிரவேசித்தன. இங்கிலாந்து, ருஷ்யாவுடனும் பிரான்சுடனும் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தபடியால்; ஜர்மெனியுடன் யுத்தம் புரியும்படி ஏற்பட்டது. ஜர்மெனி குறுக்குப்பாதையை உத்தேசித்து, ஏற்கனவே மூடுமந்திரமாக இங்கிலாந்திலிருந்து தற்காப்புக்கென்று ஒரு படையைக் கொண்டு வந்து வைத்திருக்கும் விஷயந் தெரியாததால், பெல்ஜியத்துக்குள் பிரவேசித்தது.

முதல் குண்டு போட்டதுமே பிரிட்ஷார், பெல்ஜியத்தார், பிரெஞ்சுக்காரர் ஆஸ்டிரிய மக்கள், ருஷ்யர் ஆகிய சகலரும் சினங்கொண்ட ஆடுகளைப் போல் சீறினர். பிறகு ஒருவர்க்கொருவர் கொலை புரிந்துகொண்டு மடியவாரம்பித்தனர். இப்படி நீண்டகாலம் மடிந்து கொண்டிருப்பதற்குள்ளாகவே, இந்த யுத்தம் ஏற்பட்டகாரணத்தில் உங்களுக்கு எப்படி சம்பந்தம் கிடையாதோ அதேபோல் ஒரு சம்பந்தமுமற்றிருந்த துருக்கியர், பல்கேரியர், ஜப்பானியர், அமெரிக்கர் இன்னும் மற்றவர்களும் கலந்துகொண்டு விட்டார்கள்.

உலகம் பூராவும் பைத்தியம் தலைவிரித்தாடிற்று. ஆரம்பத்தில் எழுந்த மார்க்கெட்டைப்பற்றின பேச்சை எல்லோரும் மறந்துவிட்டனர். உலகத்தில் ஏதேனும் தனக்கு ஒரு இடம் வேண்டுமென்று கோரின கெய்சரைப் பற்றி மாத்திரம் அவ்வப்போது இழிவாய்க் கூறினர்.

ஆஸ்ட்ரியாவுக்கும் சர்பியாவுக்கும் ஏற்பட்ட தகராறை ஒரு சொட்டு இரத்தம் கூட இல்லாமல் தீர்த்து வைத்திருக்கலாம். ஆனல் அதை ஒரு காரணமாய்க் காட்டிக்கொண்டு ஜர்மானிய முதலாளிகள் மீது மற்ற தேச முதலாளிகள் யுத்தம் தொடங்கி, பல லட்சக்கணக்கான மக்களைக் கொலைபுரிந்து, கோடிக்கணக்கான பவுன்களைச் சேதப்படுத்தி, உலகத்தை அசுத்தப்படுத்தினர்.

---

ஜனவரி 21ந் தேதி வார்தாவில் மத்திய மாகாண அசெம்ளியின் காங்கிரஸ் கட்சிக்கூட்டம் நடைபெறும். இதில் சர்தார் படேல் கலந்துகொண்டு காங்கிரஸ் எம். எல். ஏ. க்களின் எதிர்கால வேலைத் திட்டம் கவனிக்கப்படும்.

உங்களுக்குத் தேவையான எல்லா விதமான
எலெக்டிரிக் சாமான் :
இரும்பு கர்டர் :
முதலிய கட்டிடச் :
சாமான்கள், தண்ணீர் :
பம்புகள், பம்பு :
மோட்டார்கள் :
★
சிமிந்தி, பெயிண்ட் :
வர்ண வகைகள், :
சோபா, டேபிள், சேர், :
பர்னிச்சர்கள் :
இங்கிலீஷ் தமிழ்
டைப் ரைட்டர்கள் :
★
முதலிய எல்லாச் சாமான்களும் சல்லிசான விலைக்கு எங்களிடம் கிடைக்கும்.

சௌத் இந்தியா கார்பொரேஷன்
(மதராஸ்) லிமிடெட்,
காரைக்குடி.



'ருஷ்யாவும்-எதிர்கால உலகமும்'

## உயிர்வாழ்வதே ஓர் அதிசயம்

காவி

10

நிலத்தைச் சொந்தமாக்கிக்கொண்டு அதன்மூலம் வாழ்க்கை நடத்தினலும் சரி, பணத்தை முதலாக வைத்துக்கொண்டு அதன்மூலம் ஜீவனம் நடத்தினலும் சரி இரண்டு முதலாளித்துவ முறையேயாம்.

நிலத்தைச் சொந்தமாக வைத்திருப்பதுமூலம் ஒருவர் காலந்தள்ளுகிருர் எனின், அவர் பிறருடைய உழைப்பைக்கொண்டு வாழ்கிருர். பிறமக்களுடைய உழைப்புக்காக அவர் ஒன்றுமே தருவதில்லை. நிலம் மட்டுந்தான் சொந்தக்காரருக்கு வாடகையைத் தருகிறதென்று நினைக்கவேண்டாம். மிச்சத் தொகை அல்லது முதல் என்று வழங்கப்படும், தனக்கு அப்போது தேவையில்லாதிருக்கும் ரொக்கமும் அதனுடைய சொந்தக்காரருக்கு வாடகை தருகிறது. இதை வாடகை என்று சொல்லுவது வழக்கமில்லை. வட்டி என்று சொல்லுவார்கள்.

வட்டியை வாங்கி அதன்மூலம் ஜீவனம் நடத்துகிறமுறை தவறனது. இதையும் மாற்றவேண்டும். ஏனெனில் பணத்தை வட்டிக்கு விடக்கூடிய நிலையில் உள்ளவர்களையும் வட்டிக்கு வாங்கிப் பிழைக்கிறவர்களையும் கவனித்தால் இந்த முறையில் உள்ள கொடுமை விளங்கும்.

ஒருவர் தன் பணத்தை எப்போது (வாடகைக்கு அல்லது) வட்டிக்கு விடுவார்? தனக்குத் தேவையான பொருள்களையும் வசதிகளையும் தேடிக்கொண்ட பின்னரும், பணம் மிச்சப்படுவதாயின் அப்பணத்தை வட்டிக்குவிட நினைக்கிருர். தனக்குத் தேவையில்லாத பொருளைத் தேடிக்கொண்டதே ஒரு தவறு. அடுத்தபடியாக அதை வட்டிக்கு விடுவது அதனினும் தீது. பணம் என்பதை அரிசி, பருப்பு, புளி என்ற கணக்கில் வைத்துப்பார்த்தால், தான் வயிறார உண்டு புசித்த பின் மீதியுள்ள அரிசியையும் பருப்பையும் பட்டினி கிடக்கிற ஒருவனுக்குத் தந்துவிடவேண்டியதே முறை. ஆனல் இன்றுள்ள சர்க்கார்முறையில் நீங்களோ நானே சாப்பிட்டு முடிந்ததும் நம் வீட்டிலுள்ள அரிசியையும் பருப்பையும் பக்கத்திலுள்ள ஏழையைக் கூப்பிட்டு அவனிடம் கொடுத்துவிட்டால், கட்டாயம் அடுத்த வேளைக்குச் சோறில்லாமல் திண்டாடித் தெருவில் நிற்போம் என்பது உறுதி. ஏனெனில் நாம் கொடுப்பதுபோல், அடுத்தாற்போலுள்ளவர்கள் தம் மிச்சத்தைத் தரமாட்டார்கள். சட்டம் நாம் நினைப்பதுபோல இன்றில்லை. அபேதவாதச் சர்க்காரிலோ, வேண்டிய உணவுப் பொருள்களும் இதர வசதிகளும் இன்ஷியூர் செய்யப்பட்டிருப்பதுபோலக் கிடைத்து விடுமாகையால், நிலத்தைச் சொந்தமாக ஆக்கிக்கொள்ளவேண்டிய தேவை இல்லாதிருப்பது போலவே, பணத்தையும் சொந்தமாக வைத்துச் சேர்த்துக்கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை.

தற்போதுள்ள நிலையிலே, மிராசுதார்களுக்கும் பணக்காரர்களுக்கும் கூடச் சோற்றுப் பயம் உண்டு. இந்தப் பயத்தினல்தான், எவ்வளவு பணம் இருந்தாலும் சரி; 300 வருஷங்களுக்குக் கவலையில்லாமல் சாப்பிடுவதற்குரிய நிரந்தர சொத்துக்களைத் தேடி வைத்திருந்தாலும் சரி, அவர்களுக்குள்ள பண ஆசை நீங்குவதேயில்லை. சோற்றுப் பஞ்சம் எந்த நிமிஷத்திலும் தமக்கு வர நேரிடும் என்ற கவலையைத் தம் தலையில் சதா சர்வகாலமும் சுமந்துகொண்டுதான் இருக்கிருர்கள். இது உண்மை. அவர்கள் இப்படி கவலைப்பட வேண்டியது நியாயமும் கூட. ஏனெனில், அவர்கள் எவ்வளவு வீடுகளை வாங்கி வாடகைக்கு விட்டிருந்தாலும்சரி, எவ்வளவு ஏக்கர் நிலத்தைக் குத்தகைக்கு விட்டிருந்தாலும் சரி, எத்தனைப் பாங்கிகளில் பணம் போட்டுவைத்திருந்தாலும் சரி, இவை யாவும் அரசியல் மாற்றங்களால் ஒன்றுமற்றுப் போய்விடக் கூடும் என்பதை நன்ருய் உணர்ந்தேயிருக்கிருர்கள். அடிக்கடி சட்டம் மாறி மாறி ஏற்பட்டுக்கொண்டிருக்கிறதே, இவைகளெல்லாம் என்ன? விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டம் எதை அடிப்படையாய்க் கொண்டது? விற்பனை வரியின் நோக்கமென்ன? ஒரு கூட்டத்தார் அனுபவிக்கும் வசதிகளில் சிலவற்றை இன்னேர் கூட்டத்திற்கு அப்படியே ஒரு புதிய சட்டம் மாற்றி விடுகிறது. எனவே பெரும்பான்மையோரின் கிளர்ச்சியாலோ அல்லது சம்மதத்தினலோ ஒரு புதிய முறை ஏற்பட்டு 'நிரந்தரம்' என்று நினைக்கப்படுகிறவற்றையெல்லாம் 'நீர்க்குமிழி' போல மாற்றி அழித்துவிட முடியும். இத்தகைய மாறுதல்களுக்குப் பயந்தே, முதலாளிகள் பல்வேறு வகைகளில் தம் அறிவில் தோன்றின மார்க்கங்களிலெல்லாம் பந்தோபஸ்துச் செய்து வைத்திருக்கிருர்கள். எவ்வளவுதான் பத்திரப்படுத்திப் 'பக்கா' செய்து கொண்டிருந்தாலும்கூட, இவைகள் யாவும் அவர்களுடைய பலஹீனமான வீண் பயங்கரத்தைத்தான் காட்ட முடியுமே ஒழிய, அபேதவாத சர்க்காரில் இவைகள் மூலம் பழம்போக்கில் தப்பித்து வாழமுடியாது.

ஏனெனில், பணம் இருந்துவிட்டால் 'எதுவும் நடக்கும்' என்று முதலாளிகள் நினைக்கிருர்கள். இப்போதுள்ள முறையில் வேண்டுமானல் இது ஓரளவு உண்மையாயிருக்கலாமே ஒழிய, மக்கள் கண்விழித்துவிட்டால் பணத்தினல் ஒன்றுமே முடியாதென்பதை அகிம்சை மூலம் உணர்த்த முடியும். மக்கள் கண் விழிக்காதவரையில் முதலாளித்துவம் நடந்துகொண்டிருக்கலாம். நிலைமையை அனைவரும் விளங்கிக்கொண்டுவிட்டால், பணத்தினல் ஒரு சிறு துரும்புகூட அசையாது. உழுது பயிரிடுகிறவர்கள் உழ மறுத்துவிட்டால், மிராசுதார்களுடைய வீட்டின் அடுப்பில் பூனைதான் படுத்துறங்கும். பணத்தை வட்டிக்கு வாங்குகிறவர்கள் குறைந்து போனலும் சரி, சர்க்காருடைய உதவியாலோ அல்லது ஒரு சட்டத்தின் மூலமோ வட்டிக்குவிடுவது தடைப்பட்டாலும் சரி, பணக்காரர்கள் மற்றவர்களைப் போல உழைத்துச் சாப்பிட வேண்டிய நிலைமைக்குத்தான் வர வேண்டும். வட்டியை அல்லது வாடகையைப்பெற்று எப்போதுமே ஜீவனம் நடத்திக்கொண்டிருக்கலாம் என்ற நினைப்பும் ஏற்பாடும் மிக மோசமானவை. நம் பிள்ளைகுட்டிகளின் எதிர்கால வாழ்க்கையைக் குட்டிச்சுவராக்குகிற திட்டம் அது.

ஐரோப்பாவிலுள்ள ஜர்மெனியிலும் இங்கிலாந்திலும், பிரான்சிலும், இதர நடுநிலைத் தேசங்களிலும் 'ரேஷன்' 'ரேஷன்' என்று சொல்லுகிருர்களே அது என்ன? இங்கிலாந்தில் சர்க்கரைக்கு 'ரேஷன்' ஏற்பட்டிருக்கிறதென்ருல், இங்கிலாந்து பூராவிலுமுள்ள சர்க்கரை இவ்வளவு என்பதைக் கணக்கிட்டு, இங்கிலாந்துக்குச் சர்க்கரை ஏற்றிவருகிற கப்பல்கள் யாவுமே மூழ்கடிக்கப்பட்டாலும், இங்கிலாந்திலுள்ள மக்கள் சர்க்கரைக்கு முடைப்படாதவாறு, உள்ள சர்க்கரையை சிக்கனமாகப் பகிர்ந்து உபயோகித்துக் கொள்வதென்றுதான் அர்த்தம். ஆள் ஒன்றுக்குச் சர்க்கரை இவ்வளவு என்ற ஏற்பாடு நடைமுறையில் அனுஷ்டிக்கப்படும். பணம் நிறைய வைத்திருப்பவர்கள், தினந்தோறும் அல்வாவிலும் பாயசத்திலும் சர்க்கரைப் பொங்கலிலும் வளர்ந்திருந்தாலும்கூட, அவர்கள் நூற்றுக்கணக்கான பவுன் தரத் தயாராயிருந்தாலும், தம் விகிதாசாரத்துக்கு மேல் கால் பலம் சர்க்கரைகூட தலை கீழாய் நின்றுகேட்டாலும் வாங்கிக்கொள்ள முடியாது. ஆகவே தங்கத்தால் ஆகிய பவுனை இன்று இங்கிலாந்தில் ஒரு பலம் சர்க்கரைக்கு நினைத்த மாத்திரத்தில் மாற்றமுடியாது. யுத்தத்தால் தேச நிலைமை மாறுபட்டிருக்கிறது. பணத்தின் மூலம் சர்க்கரையை மதிப்பிடுவதற்கில்லை. அரிசி உழைக்கிறவர்களுக்குத்தான் என்று அபேதவாதத் திட்டம் ஏற்படுத்திவிட்டால் பணக்காரர்கள் உழைக்கச் சம்மதிக்காமல் பணத்தைத் தின்று சாவார்கள்?

எனவே, உணவுப் பொருள்களே ஒரு தேசத்தின் உயிர். இவற்றைப் போதுமான அளவுஉற்பத்தி செய்துப் பகிர்ந்தளிக்குமுன், இவற்றில்தமக்குத் தேவையற்ற ஒரு பகுதியை ஒரு கூட்டம் பணமாக்கிக்கொண்டு பிறருடைய வயிற்றிலடிப்பது நாளடைவில் நம்மைத் தாக்கவும்கூடும். இந்த முதலாளித்துவ முறையை எந்த தேசமும் பின்பற்றி நீடித்து நிற்கமுடியாது.

ஆனல் இந்த ரீதியில்தான் இன்று பலதேசங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. மில் முதலாளிகள் பல்லாயிரக் கணக்கானவரை மிருகக் கூட்டங்களைப் போல. இயந்திர சாலை என்கிற பந்தையிலே அடைத்து, 7, 8 மணி நேரம் ஓயாத உழைப்பை வாங்கிக்கொண்டு, இரவில் வீட்டுக்கு விரட்டிவிடுகிருர்கள். இத் தொழிலாளர்களுக்குப் போதிய உணவு வசதிகளோ, குடியிருப்பு வசதியோ, உடைகளோ கிடையா.

இயந்திரங்களுக்குத் தேவைப்படும் உயிரற்ற இயந்திரக் கருவிகளைப் போலவே இவர்கள் பாவிக்கப்படுகிருர்கள். இயந்திரக் கருவிகளைப் பழுதுபடாமல், எண்ணெய் ஊற்றித் துடைத்து வைப்பதுபோல, தொழிலாளர்களுக்குச் சொற்பக் கூலி தரப்பட்டு, அவர்கள் செத்துப்போய்விடாமல் மீண்டும் வந்து வேலை செய்வதற்கு எவ்வளவு குறைந்த பட்சம் பணம் தரலாமோ, அவ்வளவு தொகைதான் கூலி என்று நிர்ணயிக்கப்பட்டுத் தரப்படுகிறது. தொழிலாளர்களுடைய தேவை இன்னதென்பதை அவர்கள் சங்கம்மூலமோ வேலை நிறுத்தம் மூலமோ காட்டிக்கொள்ளப்படுவதாய்க் கேள்விப்படுகிருேமே ஒழிய, முதலாளிகள் தமக்குள்ளகுறைகளையும் தேவைகளையும் தொழிலாளர்களிடம் முறையிட்டுக் கொள்ளுவதாக நாம் கேள்விப்படுவதேயில்லை. ஒரு முதலாளி அல்லது பத்துப்பேர் சேர்ந்த ஒரு மில் முதலாளிக் கூட்டம், பதினுயிரக் கணக்கானவர்களுடைய உழைப்பு மூலம் உயிர்வாழ்ந்துகொண்டு, அவர்களை எந்த நிமிஷத்திலும் பட்டினிபோடமுடியும் என்கிற பயத்தை ஒவ்வொரு விநாடியிலும் உணர்த்திக் கொண்டிருப்பதுதான் இன்றைய மில் முதலாளித்வம். பெரிய கோடீசுர முதலாளியிடமுள்ள தொழிலாளர்கள்கூட தம் அடிவயிற்றில் நெருப்பைக்கட்டிக்கொண்டு, அதிகமாய் உழைத்து, குறைவான கூலியைப்பெற்று, முதலாளியின் பேராசைக்கு இரைபோட்டு அதைத் திருப்தி செய்கிற முயற்சியில் ஈடுபட்டிருப்பார்கள். மில் முதலாளிகளின் பேராசைக்கு முடிவில்லையாதலால், தொழிலாளர்கள் வீணில் உழைத்து உழைத்துக் கொட்டுகிருர்கள். இன்றைய உலகில் இவர்கள் சாகாமல் உயிருடனிருப்பதுதான் ஒரு பெரிய அதிசயம்.

இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிட்.
தலைமை ஆபீஸ் சென்னை.
—: கிளைகள் :—
பினங்கு
கோலாலம்பூர்
ரெங்கூன்
காரைக்குடி
சிவகெங்கை
புதுக்கோட்டை
தேவகோட்டை.

சீஸன் டெபாஸிட்: ரூபாய் 10,000 மும் அதற்கு மேலும்

| | | |
|---|---|---|
| 3 மாதத் தவணை | .... .... | $2\frac{3}{4}$ பேர்ஸண்ட் |
| 6 மாதத் தவணை | .... .... | 3 பேர்ஸண்ட் |

பிக்ஸட் டெபாஸிட்:

| | | |
|---|---|---|
| 1 வருடத் தவணை | .... .... | $2\frac{3}{4}$ பேர்ஸண்ட் |
| 2 வருடத் தவணை | .... .... | 3 பேர்ஸண்ட் |

இராமநாதபுரம்

ஸ்ரீமதி தேவகுஞ்சரி

காரைக்குடி



20-1-40ல் மாலை 6-5 முதல் 6-40 வரை மதுரன் அகில இந்திய ரேடியோவில் பாடுகிருர்

# மே மாதத்தில் பிரிட்டன் மீது படையெடுப்பு

## ஜர்மெனியின் பிரமாதமான ஏற்பாடுகள்

### 30,000 விமானங்களும் 400 நீர்மூழ்கிகளுமாம்

சர்வாதிகாரிகளுடைய திட்டம் திடீர் திடீரென்று மாறும். நாஜிகளுடைய திட்டமும் அப்படித்தான். ஆனால்நான் பர்லினை விட்டுப்புறப்படும்போது, பிரிட்டன் மீது படையெடுக்கும் விஷயம் இம் மாரிக் காலத்திலேயே நடக்கவேண்டுமென்று எவரும் கூறவில்லை. அதேபோல் இன்றுவரை 'மாரிக்காலத்தில் வேண்டாம்' என்கிற அந்த எண்ணம் மாருமல் இருந்திருக்கிறது.

ஆனல், 1940 மே மாத ஆரம்பத்தில், எதிர்பாராத சம்பவங்கள் ஏற்பட்டாலன்றி, ஜர்மானிய இராணுவம் பிரிட்டன் மீது படையெடுக்கும். இதற்காகவே தற்போதுவேலைசெய்து கொண்டிருக்கிறது. அந்தப் படையெடுப்பு பிரம்மிக்கத் தக்க அளவில், சரித்திரத்திலேயே கண்டிராத வகையில் இருக்கும். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை அடியோடு அறவே ஒழித்துவிடுவதென்ற நோக்கத்துடன் அப்படையெடுப்பு நடக்கும்.

ஜர்மானிய இராணுவம் இப்படிப்பட்ட திட்டத்தைப்போட்டிருக்கிறது. எதிர்பாராத அரசியல் சம்பவங்களாலும் வேறு காரணங்களாலும் ஹிட்லர் இத்திட்டத்தில் தலையிட்டாலன்றி இது நடந்தே தீரும்.

இத்தகைய ஒரு நோக்கத்துடனேயே இம் மாரிக்கால மாதங்களை ஜர்மெனி கழித்துக்கொண்டிருக்கிறது. மிக ஜாக்கிரதையாகவும் சுறுசுறுப்பாகவும் தயார் செய்து கொண்டிருக்கிறது.

இங்கிலாந்து மீது தாக்குதலைப் பிரயோகிப்பதென்றால், வேறு வழிகள் கிடையாது- நீர்மூழ்கிக் கப்பல்களாலும் யுத்த விமானங்களாலுமே முடியும்.

#### 30,000 விமானங்கள்

ஆகாய மார்க்கமாய்ச் சென்று இங்கிலாந்தைத் தாக்குவதற்காக,ஜர்மெனி தயாரித்து வைத்திருக்கும் விமானங்களின் எண்ணிக்கையோ திடுக்கிடக்கூடியது. அவர்கள் வற்புறுத்திச் சாதித்துக் கூறுகிற எண்ணிக்கையை மிக மிகக் குறைத்து மதிப்பிட்டாலும் கூட, ஆகாயத்தில் பறக்கக்கூடிய நல்ல சீதோஷ்ண வசதி ஏற்படுகின்றபோது 30,000விமானங்களைப் பார்க்க முடியும்.

இதை நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, இதுவரையில் கண்டிராத வகையில் பிரம்மிக்கத்தக்க ஒரு பிரம்மாண்டமான விமானப் படை ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது என்பது நிச்சயத்திலும் நிச்சயமென்று சொல்லப்படுகிறது. 'அது சரி, இவ்வளவு விமானங்களையும் ஓட்டுவதற்கு ஆட்கள் ஏது?' என்று கேட்டால், நீண்டகாலமாக இதற்காகவேண்டிய ஆட்களைத் தயாரித்துக் கொண்டிருப்பதாயும் சொல்லுகிறார்கள்.

விமான நிலையங்கள் விஸ்தரிக்கப்பட்டிருப்பது வாஸ்தவம். மூனிச் நகரத்தை ஒட்டினாற்போல, அதைச் சுற்றிமட்டும் 14 விமான நிலையங்கள் இருக்கின்றன.

#### சப்மரின் பெருக்கம்-400!

விமானம் ஓட்டுவதிலோ அல்லது விமான அமைப்பிலோ, ஜர்மென் தேசந்தான் சிறந்ததென்று ஜர்மானியர் சொல்லிக்கொள்வது கிடையாது. ஆனல், பிரிட்டிஷ் கப்பற் போக்குவரத்தைச் சேதப்படுத்துவதில் ஜர்மானிய சப்மாரின்களும் மாலுமிகளும் மிகச் சமர்த்துடையவர்கள் என்பதை அவர்கள் துணிவுடன் கூறுகின்றார்கள்.

என்னுடைய மதிப்பிற்குரிய ஒருவர் என்னிடம் சொன்னதை நான் நம்பாமலிருப்பதற்கில்லை. இந்த யுத்தம் தொடங்கியபின் 400 சப்மாரின்கள் ஆங்காங்கு வேலை செய்து கொண்டிருப்பதாய்த் தெரிவித்தார். ஜர்மானியர்கள் அமெரிக்கரின் 'பெல்ட் கன்வேயர்' முறையில் பெரிய அளவிலும் சிறிய அளவிலுமாய் இருவித சப்மாரின்களைச் செய்கின்றனர்.

இவ்வளவு நீர்மூழ்கிகளுக்கும் ஆட்கள் கிடைக்கவேண்டுமே என்று கேட்டபோது, பழைய பதில்தான்— நீண்டகாலமாகவே எதிர்பார்த்துக் கொண்டு தயார் செய்திருந்தனராம்.

பழைய சப்மாரின் உத்தியோகஸ்தர்களையெல்லாம் மீண்டும் வேலைக்கு அழைத்து நியமித்துக்கொண்டிருப்பது உண்மையே. எனினும் ராயல் ஓக்கை மூழ்கடித்த மாலுமிகளைப் பர்லின் நகரத்தில் மிக அருகில் நின்று நான் பார்த்தேன். அவர்கள் இளைஞர்கள்.

400 சப்மாரின் என்று மிக ஊர்ச்சிதப்படுத்திச் சொல்லுகிறார்கள். சரி, 300 என்றே வைத்துக்கொள்வோம். அப்போதும்கூட, வாரத்தில் இரண்டு உற்பத்தி செய்வதாக ஸ்ரீ சர்ச்சில் மதிப்பிட்டுப் பிரசங்கத்தில்கூட (நவம்பர் 12-ந்தேதி) சொன்னதை, இவர்கள் விரைவில் மிஞ்சிவிடுவார்கள்.

#### மற்ற முனைகளிலே!

முக்கியமான உத்தியோகஸ்தர் ஒருவரிடம் நான் கேட்டேன்:

"நீங்கள் மே மாதத்தில் இங்கிலாந்து மீது படையெடுத்து அதை அழிக்கத் திட்டம் போட்டிருக்கிறீர்களே, அப்போது பிரெஞ்சுத் துருப்புகளும் பிரிட்டிஷ் படைகளும் என்ன செய்து கொண்டிருக்குமென்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?"

அந்த உத்தியோகஸ்தர் பதிலளித்தார்:

"ஓ, பிரான்சுதானே? அது மற்ற முனைகளிலே போர் செய்து கொண்டிருக்கும்" என்று பதிலளித்தார்.

நான் வியப்படைந்தேன். வேறு போர்முனை ஏது என்று கேட்டேன்.

"உதாரணமாக ஸ்பெயின் ஒன்று. இன்னும் மற்ற இடங்களிலும்கூட பிரான்சு யுத்தம் புரிந்துகொண்டிருக்கும்"

நான் இதை வீண் ஜம்பமென்று நினைத்திருப்பேன். ஆனல், மறுத்துக் கூறமுடியாத உண்மைகள் பல பின்னர் எனக்குக் கிடைத்தன.

உதாரணமாக, வியன்ன நகரத்திலுள்ள சர்வகலாசாலையை மூடிவிட்டு அதில் படிக்கிற மாணவர்கள் அனைவரும் யுத்தத்தில் சேர்க்கப்பட்டு, பிரஞ்சு இத்தாலி எல்லையில் பெரும் பீரங்கிகளை அணிவகுத்து வைக்குமாறு அனுப்பப்பட்டிருக்கிறார்கள். பிரென்னர் என்ற இடத்தைப் பலப்படுத்திக்கொண்டிருப்பதாக நான் ஜர்மெனியில் நுழைவதற்கு முன்னமேயே கேள்விப்பட்டேன். ஆனல் அப்போது அதை நான் ஒரு பெரிய விஷயமாய்க் கருதவில்லை. பின்னர் அச்செய்தியிலிருந்து ஒன்று தெரிந்தது. அதாவது சீக்பிரீட் கோட்டையைப் போல, இத்தாலி தேசத்தார் தம் பிரெஞ்சு எல்லையில் ஒன்றை ஏற்படுத்திக் கொள்வதற்காக ஜர்மானியர் இத்தாலிக்கு உதவிபுரிந்துவருகிறனர். பிரான்சும் பிரிட்டனும் சேர்ந்து இத்தாலியைத் தாக்கமுடியாதவாறு இந்த ஏற்பாடு இப்போது நடந்துகொண்டிருக்கிறது.

இதிலிருந்து இத்தாலி வரும் மே மாதத்துக்குள் அல்லது மே மாதத்தில்தான் யுத்தத்தில் கலந்து கொள்ளுமென்று நான் சொல்லவரவில்லை. ஆனல், மே மாதத்தில் ஜர்மெனி பிரிட்டன் மீது படையெடுக்கும்போது, பிரெஞ்சுத் துருப்புகளின் கவனம் ஸ்பெயின் பக்கத்திலும் இத்தாலி பக்கத்திலுமாய்ச் சிதறி இருக்கும்படி, இத்தாலியும் ஸ்பெயினும் பிரான்சுக்குத் தொந்திரவுகொடுத்துக் கொண்டிருக்கும்.

இந்த யுத்தம் ஆரம்பமாவதற்கு முன்னாலேயே, ஸ்பெயின் கலக சம்பந்தமாய் அங்கு சென்றிருந்த ஓர் அமெரிக்க நிருபர் "யுத்தம் வந்தால் ஸ்பெயினை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லியிருந்தார். அது இப்போது என் நினைவுக்கு வருகிறது. யுத்த காலத்தில் இத்தாலியும் ஜர்மெனியும் ஸ்பெயின் தேச எல்லையில் தம் துருப்புகளை வைத்துக்கொள்ளலாமென்று பிராங்கோ இத் தேசங்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டிருப்பதாக அனைவராலும் நம்பப் படுகிறது. ஸ்பெயின் தேச எல்லைப்பக்கத்தில்தான், பிரான்சுக்கு அதிகமாய்ப் பலமில்லை.

ஏராளமான துருப்புகள் ஸ்பெயினுக்குப் போய்ச்சேருவதென்றால், அது வெளிப்படத் தெரியாமலிருக்க முடியாது. ஆயினும், ஜர்மானியத் துருப்புகள் ஸ்பெயினுக்குப் போய்க் கொண்டிருக்கின்றன என்பதற்கு ஆதாரங்களில்லாமலில்லை. பல வாரங்களாய் நூரெம்பர்க், வர்ஸ்பர்க் ஆகியவற்றின் வழியாகத் துருப்புகள் போய்க்கொண்டே யிருக்கின்றன.

#### இங்கிலாந்து பணிவது உறுதி

வரும் கோடைக்காலத்தில் இங்கிலாந்து பணிந்துவிடும் என்கிற விஷயத்தில் ஜர்மானியர் எல்லோருமே அபிப்பிராய பேதமில்லாமல் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். நாஜிகளும் சரி, நாஜிக் கட்சிக்கு எதிரிடையாயுள்ளவர்களும் சரி, இங்கிலாந்து வரும் கோடைக்காலத்தில் க்ஷீணித்து விடும் என்கிற விஷயத்தை மிக உறுதியென்று வைத்துக்கொண்டே பேசுகிறார்கள். எப்படி 1914-ம் வருஷத்தில் முதல் மூச்சிலேயே பாரிஸ் நகரைப் பிடித்து விடுவோமென்று திண்ணமாய் எதிர்பார்த்தார்களோ, அவ்வளவு நிச்சயமாய் இந்த முறை இங்கிலாந்தைப் படையெடுத்து வெற்றியடைவோமென்று நினைக்கின்றனர்.

சென்ற மகா யுத்தத்தில் 15 சப்மாரின்களுக்குமேல் எந்தக் காலத்திலும் தம்வசம் இருந்ததில்லை யென்றும், வரும் மே மாதத்தில் 200 சப்மாரின்கள் இருந்தபோதிலும்கூட இங்கிலாந்தை மண்டியிடச் செய்ய முடியுமென்றும், தாங்கள் இப்படி முன்பு செய்தபோது ஐக்கிய அமெரிக்கா 1917ல் தலையிட்டு-(குட்டிச் சுவராக்கி)-விட்டதென்றும் கருதுகிறார்கள்!

பல்வேறு வெளிநாட்டுக் காரியாலய உத்தியோகஸ்தர்களும் இவ் விஷயமாய்,

"லண்டன் தாக்கப்படமாட்டாது. சென்ற யுத்தத்தில் செய்த அதே தவறுகளை மீண்டும் நாங்கள் செய்வோமா? அத்தகைய எண்ணம் எங்களுக்குச் சிறிதளவுகூட இப்போது கிடையாது. ஆகையால்தான் இந்த யுத்தத்தில் எந்தப் பெல்ஜியத்தையும் காணமுடியவில்லை. ஆகையால்தான் நாங்கள் அதீனியா கப்பலை மூழ்கடிக்கவில்லை. ஆகையால்தான் இந்த யுத்தத்திலிருந்து அமெரிக்கராகிய உங்களை அப்பால் ஒதுக்கிவைத்திருக்க நாங்கள் எவ்வளவோ சிரமப்படுகிறோம். நாங்கள் லண்டனைத் தாக்கித் தகர்த்தால், நடுநிலைமைத் தேசங்களிடையே எங்களுக்குப் பிரதிபாதகம் விளையும்" என்று கூறுவதை நான் பல முறைகள் கேட்டிருக்கிறேன்.

இன்று பர்லின் சர்க்காரிலுள்ள பலர் இத்தகைய அபிப்பிராயமே கொண்டிருக்கிறார்கள். இன்னும் 2 மாதங் கழித்தால் அப்போதும் இதே அபிப்பிராயம் கொண்டிருப்பார்களா என்பது வேறு விஷயம்.

#### சொன்னலும் கேட்கமாட்டார்கள்

மே மாதம் வரையில் பிரிட்டன் சும்மாயிராது. பிரிட்டன் பதிலுக்குச் செய்யத் துணிந்தால் யுத்த விமானப் படையெடுப்பில் ஜர்மெனி மிகச் சேதப்பட்டு, யுத்தம் புரியுஞ் சாமர்த்தியத்தை இழந்துவிடக்கூடுமே என்பதை ஞாபகமூட்டினல், "ஓ! எதிரிகளின் யுத்த விமானங்களை நாசப்படுத்துகிற திறமையில் எங்களுக்கு இணை இந்த உலகத்தில் வேறு எவருமே இல்லை" என்கிறார்கள். எதிரிகளின் சாமர்த்தியத்தை இல்லையென்றுக்கிப் பேசுவதென்றால் ஒருவர் வெற்றியடைவது எப்போதுமே நிச்சயந்தான். ஆனல் இதிலுள்ள அபாயங்களைச் சாதாரணமானவையென்று நான் சொல்லமாட்டேன்.

ஜர்மானியர் மிக மிகச் சாமர்த்தியமுடைய சிப்பாய்கள். கட்டுப்பாட்டிலும் ஒழுங்கிலும் அவர்கள் உலகத்திலேயே மிகச் சிறந்தவர்கள். ஜர்மானியத் தலைவர்கள் நாணயம் கொள்கை என்ற விஷயங்களை அறியாதவர்கள். மெய்மறந்து உயிரை வெறுத்துச் சண்டைபோடுவார்கள். மிகச் சாமர்த்தியமுடன் மிருகங்களைப்போல வெறிபிடித்துச் சமர் புரிவார்கள். அவர்களுடைய துணிவுக்கு உதாரணம், ஸ்காப்பா பிளோவில் புகுந்து ஒரு சப்மாரின் ஒரு மகத்தான காரியத்தைச் செய்ததே அது தான்!

[ஸ்ரீ ஒஸ்வால்டு காரிஸன் வில்லர்ட் என்பார் எழுதிய கட்டுரை இது. இவர் மிகுந்த கெட்டிக்காரர். அமெரிக்கர். 'நியூயார்க் நேஷன்' என்ற பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்தவர்.

ஜர்மெனியின் உள்நாட்டு விபரங்களையறிவதற்காக அங்கு ஒரு மாதம் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டுவந்து இப்போது 'டெயிலி டெலிகிராப்' பத்திரிகைக்கு 6 கட்டுரை எழுதியிருக்கிறார். அவற்றில் இது ஒன்று.

சென்றவாரம் இவர் 'ஸ்பெக்டேடர்' பத்திரிகையில் யூதர்படும் கொடுமையைப்பற்றி எழுதியிருந்த கட்டுரை ஊழியனில் வந்திருந்தது. ஆ. ர்.]


ஸ்ரீ ராமநாதன் கம்பெனி
மகர்நோம்புப் பொட்டல் காரைக்குடி. (மகாதேவன் கம்பெனி இருந்த இடம்)
மரச்சாமான்கள் வியாபாரிகள்
கலியாண ஜோடிப்புகளுக்கு வேண்டிய பல சாமான்களுமிருக்கின்றன.
ஒருமுறை எங்கள் ஆபீஸிற்கு வந்து பார்வையிடக் கோருகிறோம்.




கத்தியினல் காய்கறி அரியலாம்; மனிதரையும் வெட்டலாம்.

மின்சாரத்தால் வெளிச்சமுண்டாக்கலாம்; இயந்திரங்களை ஓட்டலாம்; மக்கள் தற்கொலையும் புரிந்துகொள்ளலாம்.

கொடிய பாஷாணத்தைக்கொண்டு உயிரையே மீட்கும் மருந்துகளைச் செய்யலாம்; அதைக்கொண்டே மக்களைக் கூட்டங் கூட்டமாய்க் கொல்லவுஞ் செய்யலாம்.

விமானத்தில் ஏறி மக்கள் பறவைகளைப்போலப் பறந்து திரிந்து வரலாம்; அல்லது ஊர் நெடுக விஷக் குண்டுகளை வீசி நகரம் நகரமாய்த் தேச முழுவதையும் அழித்து நொடிப் போழ்தில் வெறும் நரகமாக்கிவிடலாம். எல்லாம் மனிதனுடைய எண்ணத்தைப் பொறுத்திருக்கின்றன.

'தீண்டாமை' உண்டென்று ஒப்புக்கொள்கிறவர்கள் சநாதனிகள் அல்லர் என்று பாஞ்சாலச் சநாதனிகள் சொல்லுகிறார்கள். வைதிகத்திலே தம் உயிரையே வைத்துச் சம்ஸ்கிருதத்தில் பெரும் பாண்டித்தியம்பெற்ற பண்டித மாளவ்யாவின் சநாதனத்திலே தீண்டாமைக்கு இடமில்லை. ஆதி சங்கரரின் அறிவிலே அது நிற்கவில்லை. ஸ்ரீ ராமானுஜரோ தீண்டாமையில் எவ்வளவு முட்டாள்தனமிருக்கிறதென்பதை மிக ரஸிக்கத்தகுந்தவாறு நன்ருகக்காட்டினர்—தீண்டத் தக்கவர் தீண்டத் தகாதவர் எனப் பிறப்பால் வேறுபடுத்தி வைக்கப்பட்டிருந்தவர்களையெல்லாம் ஒரே தசாவதாரக் குழம்பாக்கிக் குப்பலாக்கி மாற்றி வைத்துவிட்டுப் போயிருக்கிறார்!

இப்படி பெரிய பெரிய அறிவாளிகளெல்லாம் 'தீண்டாமை என்பது பாவம். இது ஹிந்து மதத்தில் இருக்கவேகூடாது. இது மதத்தையே அழித்துவிடும். இது இடைக்காலத்திலே தோன்றிய கொடிய 'விஷநோய்' என்று ஆராய்ச்சியுடன் கூறிவிட்டார்கள். மக்கள் அறிவும் தீண்டாமை விலக்குக்கு இடமளிக்கிறது. மனச்சாட்சியும் இதை ஒப்புக்கொள்ளுகின்றது.

ஆனல் 'சநாதனிகள்' என்ற பெயரால் ஒரு கூட்டம் ஹிந்து மதத்தை அழிக்கப்பார்க்கிறது.

தீண்டாமை விஷயம் மட்டுந்தான் சநாதனத்திலே ஒரு பிரச்னையாக இருந்துகொண்டிருக்கிறதென்று நினைக்காதீர்கள். ஊர் அறிந்த அயோக்கியர்களும் குடிகாரர்களும் தூர்த்தர்களும் முடிச்சுமாறிகளும் தம்மைச் சநாதனிகள் என்று சொல்லிக்கொண்டு, சநாதனக்கூட்டத்திலே பரம சாதுக்கள்போலவந்து உட்காருவதை அல்லது கலந்துகொள்ளுவதை உண்மைச் 'சநாதனிகள்' தடுக்கிறார்களா? இப்படித் தடுப்பதற்கு இன்றைய சநாதனிகள் என்ன ஏற்பாடு செய்துவைத்திருக்கிறார்கள்? உண்மை சநாதனிகள் யார்? அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? அவர்களுடைய ஒழுக்கம் ஓரளவாவது கட்டுப்படுத்தி வைக்கப்பட்டிருக்கிறதா?

## மனச்சாட்சியும் மழுங்கும்

இன்றைய நிலையில் 'உயர்சாதியிலே பிறந்து' அவன் சகல அயோக்கியத்தனங்களையும் புரிந்தால்கூட 'தீண்டாதவர்கள் சாதியில் கீழ்ப்பட்டவர்கள். அவர்களைக் கோயிலுக்குள் விடக்கூடாது' என்று மட்டும் சொல்லிவிட்டால் அவனைச் 'சநாதனி'கள் கூட்டத்தில் சேர்த்துக்கொள்ள மதுரையில் பலர் காத்துக்கொண்டிருக்கிறார்கள். சொற்ப சந்தாவைச் செலுத்திவிட்டு, அச்சடித்த ரசீது பெற்றுக்கொள்ளலாம். சநாதன சங்கத்தில் அங்கத்தினர் ஆகிறசடங்கு இத்துடன் முடிந்துவிடுகிறது. திருடலாம், பொய் சொல்லலாம், முடிச்சவிழ்க்கலாம், பொய்க்கணக்கு எழுதலாம், கொடுத்த பணத்தை வாயில் போட்டுக்கொண்டு ஓடலாம், புகையிலை போடலாம், சிகரெட் குடிக்கலாம், சுவர் ஏறிக் குதிக்கலாம், தீண்டாதவர்களையும் தீண்டலாம், ஆனல் ஆலயப் பிரவேசம் என்றதும் 'தோஷம் தோஷம் தோஷம்' என்று கன்னத்தில் போட்டுக்கொள்ளவேண்டியது.

இவ்வளவு சுருக்கத்திலே இருக்கிறது இன்றைய அரசியல் சநாதனம்!

இவ்வளவு கீழான நிலைமையிலிருப்பதற்குக் காரணம் பொருளாதாரந்தான். வறுமை ஏற்பட்டால் மனிதன் எல்லாவற்றையுஞ் செய்யத் துணிவது இயற்கை. சிற்சிலரை மட்டுமே விதிவிலக்காய்ச் சொல்லலாம். பொதுவாக அரசியல் அடிமைத்தனம் பொருளாதாரத்தைப் பாதிக்கும், கலையைக் குறைக்கும், அறிவைக் குறைக்கும், பின்னர் மனச் சாட்சியையும் மழுங்க வைக்கும்.

ஆலயப் பிரவேசத்தை எதிர்ப்பவர்கள் மேலே சொன்னவகையில் படிப்படியாக இறங்கி மனச்சாட்சியையும் மழுங்க வைத்துக்கொண்டுவிட்டபடியால்தான் இன்று சிறிதும் கூசாமல், தம் சொந்த மதத்தினராகிய இந்துக்களுக்கு ஆலயப்பிரவேச உரிமையளிக்க மறுக்கிறார்கள். மனச்சாட்சியுடன் உணர்ந்து சொல்லுவதாக அவர்கள் கூறும்போது "ஐயோ, மனச்சாட்சி இப்படி மழுங்கியும் விடுமோ" என்று நாம் ஆச்சரியப்படுகிறோம்.

இத்தகைய ஆச்சரியம் சென்ற சனிக்கிழமை யன்று, காரைக்குடி சிவன்கோயில் குருபூஜை மடத்தில் பலருக்கு ஏற்பட்டது. அங்கே நடந்துகொண்டிருந்த கூட்டம் ஆலயப்பிரவேசத்தை எதிர்க்கிற சநாதனிகளின் கூட்டம். ஸ்ரீ அழகப்பய்யா என்கிற பெயரையுடைய ஒருவர் தலைமை வகித்தார். அகில இந்திய வருணாசிரம சுயராஜ்ய சங்கத்தினர் ராவ் சாகேப் என். நடேசய்யர் (ராவ் சாகேப் என்றால் பலருக்கு ஞாபகத்தில் வராமலிருக்கலாம். இவருடைய வருணாச்ரம நியமத்தை உத்தேசித்து வழங்கப்பட்டதல்ல. நம் காருண்ய பிரிட்டிஷ் சர்க்காரால் வழங்கப்பட்டது. எதற்காக வழங்கப்பட்டதென்கிற விஷயம் நமக்குத் தெரியாது) இக் கூட்டத்தில் பேசினர்.

சென்னைக் கவர்னர் ஆலயப் பிரவேசச் சட்டத்தை ரத்து செய்யவோ நிறுத்தி வைக்கவோ முடியாதென்று சொல்லி விட்டாரல்லவா? ஆகவே வைஸ்ராயிடம் போகவேண்டுமென்றும், அதுவும் முடியாவிட்டால் மன்னரிடம் (பிரிட்டனில் இருக்கிற 6 வது ஜியார்ஜ் மன்னரிடத்தான்) போக ஏற்பாடு செய்து கொண்டிருப்பதாகவும் வெளியிட்டார். இதற்காக இந்த வருணாச்ரம சங்கத்தைப் பலப்படுத்த, இம்மாதம் 20 ந் தேதிக்குள் (வரும் சனிக்கிழமைக்குள்) 1500 சநாதனிகளைக் காரைக்குடியிலே அங்கத்தினராய்ச் சேர்க்க வேண்டுமென்று சொன்னாராம்!

பேஷாக ராவ்சாகேப் டில்லி போகட்டும். சமுத்திரப் பிரயாணம் செய்து, நம் வெள்ளைக்காரப் பிரிட்டிஷ் மன்னருடன் கைகுலுக்கி, தீண்டாமையைப் பற்றி அவருக்குச் சொல்லிவரட்டும். ஆனல் கவர்னராலும் வைஸ்ராயாலும் ஒப்புக்கொள்ளப்படாத விஷயத்தில் மன்னர் இசைவாரா?

'மன்னரும் இசையாவிடில் கடவுள் இருக்கிறார்! அவருடைய சித்தம் இப்படிப்போலும்' என்ற வார்த்தை இந்த ராவ்சாகேப் வாயிலிருந்து பிறக்கவில்லை பார்த்தீர்களா!

வாஸ்தவத்திலேயே இந்த ஆலயப் பிரவேசங்கள் வேண்டியதில்லைதான். இதை இன்றுகூட தடுப்பதற்கு ஒரு சிறிய வழியிருக்கிறது. நடேசய்யர்களும் அழகப்பய்யாக்களும் தம் மனதிலே 'தீண்டாதவர்கள் என வழங்கப்படுகிறவர்களும் மனிதர்கள்' என்ற எண்ணத்துக்குச் சிறிது இடமளித்துவிட்டால் இவ்வளவு தகாறும் ஏற்படாது. தீண்டாதவன் என்ன தவறு செய்தான்? ராவ்சாகேப் என்ன நற்காரியம் செய்தார்; கோயிலுக்குள் பாரபட்சம் பார்க்க?

இக் கேள்வியைத்தான் அன்று சிவன்கோயில் குருபூஜை மடத்திலே நடந்த கூட்டத்திலே சிலர் ஆச்சரியத்துடன் கேட்டார்கள். அரசியல் அடிமைத் தனத்தால் அவர்களுடைய மனச்சாட்சி மழுங்கியுள்ள விஷயம் கேள்வி கேட்டவர்களுக்குத் தெரியாது!

—சர்வதேசக் குதர்க்க நாசப்பரசு.


அபிலாஷை! முன்னேற்றம்!! தொழில்!!!

நாஷனல் இன்ஷ்யூரன்ஸ் கோஷ்டியில் சேர்ந்தால் இவை அனைத்தையும் பெறலாம். எமது பாலிசி நிபந்தனைகள் மிகவும் தாராளமானவை, ஏஜன்ஸி திட்டமோ வசீகரமானது ரூ. 3,40,00,000-க்கு அதிகமாக ஐவேஜுகள் இருப்பதால் பாலிசிதாரர்களுக்கு "நாஷனல்" இணையில்லாத பாதுகாப்பை அளிக்கின்றது. உங்களுக்கோ இத்துறையில் 32 வருஷத்திய அனுபவத்துடன் கூடிய கம்பெனியின் உதவி அளிக்கப்படுகின்றது. ஆகவே உங்களுக்கு வெற்றி நிச்சயமாகும்.

நாஷனல்
இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட்,
(தலைமை ஆபீஸ்:- கல்கத்தா)

மதராஸ் பிராஞ்சு:-
நாஷனல் இன்ஷூரன்ஸ் பில்டிங்ஸ்,
362 சைனபஜார் ரோடு, மதராஸ்.

ஸப் பிராஞ்சு ஆபீஸ்:-
171 புதுத்தெரு, மதுரை.

ஸப் பிராஞ்சு ஆபீஸ்:-
தேவாங்கா பாங்க் பில்டிங்ஸ்,
கெம்பகௌடா ரோடு,
பெங்களூர் ஸிடி.



ஹைதராபாத் 9-5-38.
ஐயா,
... வாந்தி செய்து கொண்டிருந்த ஒருவருக்கும், வயிற்று வலியினல் தொந்திரவு பட்டுக்கொண்டிருந்த மற்றொருவருக்கும் கொடுத்ததில் "மின்சாரரசம் தங்கமான மருந்து" என்று நிரூபித்து காட்டியது.
டாக்டர் S.R. ராஜாராம், M.B.,B.S.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் சிறந்த டாக்டரைப் போல உதவக்கூடியது
மின்சாரரசம்
மனிதர் தலை முதல் கால்வரை வரும் சகல வியாதிகளுக்கும் தேவாமிருதம் போன்றது.
ஒரே முறை பரீக்ஷியுங்கள். புட்டி 1-க்கு ரூ. 2—0—0. எல்லா இடங்களிலும் கிடைக்கும்.
விலாசம்: மின்சாரரசம் கம்பெனி லிமிடெட், சேலம்.

முத்துக்காலிவலசு 27-9-37.
ஐயா,
... எனக்கு 25 வருஷ காலமாக வயிற்றுவலி இருந்தது. மின்சாரரசம் சாப்பிட்ட பிறகு பறந்தோடி விட்டது. இப்பொழுது சுகமாயிருக்கிறேன்...
நாச்சிமுத்து கவுண்டர்.

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேனுல்

பிரமாதி-ஸு தை-மீ - 5உ (18—1—40) வியாழன்


## ஐரோப்பா முழுதும் பரவிவரும் யுத்தம்

சென்ற ஆண்டுச் செப்டம்பர் முதல்நாள் வெள்ளிக்கிழமை யன்று மூண்ட போர் இன்னும் முடியவில்லை. போருக்குக் காரண மாயிருந்த பழய போலந்து மறைந்துபோயிற்று. ஹிட்லர் தாம் கோரியதைவிட அதிகப் பங்கைத் தேடிக்கொண்டார். எஞ்சிய பகுதியை ருஷ்யா பிடித்துக்கொண்டது. ஆயினும் போலந்தின் உரிமையைக் காப்பாற்றும் பொருட்டுப் போரில் குதித்த பிரிட்டனும் பிரான்சும் அன்றுமுதல் இன்றுவரை மேற்கு முனையில் இலவு காத்துக்கொண்டிருக்கின்றன.

பிரிட்டிஷ் துருப்புகளும் பிரெஞ்சுத் துருப்புகளும் மேற் குப் போர்முனையில் குவிக்கப்பட்ட காரணம் என்ன? சீக் பிரீட் அரணைத் துளைத்துச் சென்று ஜர்மெனியைத் தாக்கி னல், போலந்தில் யுத்தம் புரிந்து கொண்டிருந்த ஜர்மானியத் துருப்புகள் போலந்தை விட்டுவிட்டு,சீக்பிரீட் அரணை எதிரிகள் தாண்ட முடியாதவாறு தடுக்க ஓடிவரும் என்பதாகும். பிரிட் டிஷாரும் பிரெஞ்சுக்காரர்களும் இப்படி எண்ணினர். ஆனல் நடந்தது வேறொன்று.

போலந்தின் மேற்குப் பகுதி ஜர்மானியர் வசமாகுமுன் னமேயே, "போலந்தின் கிழ்த்திசைக் கவலை உங்களுக்கு வேண்டாம். நாங்கள் பிடித்துக்கொண்டு விட்டோம்" என்று ருஷ்யத் துருப்புகள் ஜர்மானியத் துருப்புகளிடம் கூறி, ஜர் மானியர் சிரமத்தை நீக்கிவிட்டன. ஜர்மானியர் உடனே சீக்பிரீட் அரணைக்காக்க விரைந்து வந்தனர். சீக்பிரீட் அப் படியேதானிருந்தது. அதனருகில் நின்ற பிரெஞ்சுத் துருப் புகள் பின்வாங்கிக் கொண்டன. இன்றும் மேற்கு முனை யைப் பற்றின கவனம் மக்களுக்கு நீங்கவில்லை. அங்கே நேசத்தேசத் துருப்புகள் ஜர்மானியத் துருப்புகளுடன் யுத்தம் புரிந்து கொண்டிருப்பதாக ஒரு நினைப்பு. ஆனல் அங்கு இப் போது யுத்தம் நடக்கவில்லை. பெரும்பாலும் அமைதி நிலவு வதாகவே செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன.

உண்மையில் ஜர்மெனிக்கும் நேசத் தேசங்களுக்கும் கடற்போர்தான் தற்போது நடந்துகொண்டிருக்கிறது. அவ் வப்போது விமானப்போர்ச் செய்திகள் சிலவும் கிடைக்கின் றன. ஜர்மெனி விளைத்துவரும் கப்பற்சேதத்தால் பெரும்பா லும் பிரிட்டனே பாதிக்கப்படுகிறது. ஏராளமான கப்பல் களையும், மாலுமிகளையும், பொருள்களையும் பிரிட்டன் இழந்து கொண்டிருக்கிறது. இன்னும் ஜர்மெனி புரிகிற கப்பல் நாச வேலை ஒடுக்கப்படவில்லை. கப்பல்கள் மூழ்கடிக்கப்படுகிற செய்திகளைப் படித்துப் படித்து நம் இருதயம்கூட ஓரளவு உணர்ச்சியற்றுவிட்டது.

நீர்மூழ்கிக்கப்பல்களின் பயம் ஒருபுறமிருக்க, ஜர்மானிய விமானிகள் அடிக்கடி பிரிட்டனை நோக்கிப் பறந்து அதன் அமைதியைக் குலைத்தும் விடுகின்றனர். ஜர்மெனி, பிரிட் டன், பிரான்சு ஆகிய நாடுகள் கலந்துகொண்ட யுத்தம் இவ்வாறிருக்கிறது.

பின்லாந்து ருஷ்யப்போர் சென்ற ஆண்டு நவம்பர் இருபத்தொன்பதாம் தேதி புதன்கிழமையன்று தொடங் கிற்று. இன்று ஐம்பது நாட்களாய் வலிபடைத்த ருஷ்யா சிறிய பின்லாந்தைச் சீர்குலைத்துக்கொண்டிருக்கிறது. இன்று வரை பின்லாந்து எதிர்த்துச் சமர் புரிவதே ஓர் அதிசயம். பின்லாந்துத் தலைவர்கள் இப்படியே தங்களால் இன்னும் சில வாரங்கள்கூட சமாளித்து நிற்க முடியாதென்று உலக வல்லரசுகளிடம் கூக்குரலிட்டு உதவி கோருகின்றனர். போதிய ஆதரவைப் பின்லாந்து இன்னும் பெறவில்லை. வல்லரசுகள் புரிவதாய் வாக்களித்த உதவி சில நாட்களிலே புரிந்துவிடும். இதன் பின்னரே பின்லாந்து யானைவாயிற் போன கரும்பா இல்லையா என்பதை நாம் நிர்ணயிக்கலாம்.

ஜர்மென் நீர்மூழ்கிகளுக்கும் பிரிட்டிஷ் கப்பல்களுக்கும், மேலைக்கடல்களில் யாண்டும் நடக்கிற கடற்போர் நீங்கலாக- பின்லாந்துக்கும் ருஷ்யாவுக்கும் பின்லாந்தின் எல்லையில் நடந்துகொண்டிருக்கிற இராணுவ, விமானப் போர்கள் நீங் கலாக—இன்னும் சில வாரங்களுக்குள்ளேயே பல பிரதேசங் கள் யுத்தகளங்களாய் மாறக்கூடிய நிலையில் நடுங்கிக்கொண்டு நிற்கின்றன.

ஐரோப்பாவிலுள்ள சின்னச் சின்ன நாடுகளை மூன்று பிரிவுகளில் அடக்கலாம்—ஸ்காண்டினேவிய நாடுகள், பால் டிக் நாடுகள், பால்கன் நாடுகள் என்று. ஸ்காண்டினேவியப் பிரிவில் நார்வே, சுவீடன், டென்மார்க் ஆகியவை யடங்கும். பால்டிக் நாடுகள் லாட்வியா, லிதுவேனியா, எஸ்தோனியா ஆகியவை. பின்லாந்து அதன் கிழக்குப் பிரதேசப் பாது காப்பை முன்னிட்டு பால்டிக் பிரதேச நாடுகளில் ஒன்றாய்க் கருதப்படுகிறது. ஆனல் அரசியல் முறைப்படி ஸ்காண்டி னேவியப்பிரிவில் வைத்துப்பேசப்படுவது வழக்கம்; அதாவது நார்வே, சுவீடன், டென்மார்க் ஆகியவற்றுடன்.

பால்டிக் பிரதேசங்களில் லாட்வியா, லிதுவேனியா, எஸ் தோனியா ஆகிய நாடுகள் ருஷ்யாவிடம் தம் உயிர் நாடியைக் கொடுத்துவிட்டுத் தம் உரிமையைக் காப்பாற்றிக்கொண்டு விட்டன! ஆனல் ருஷ்யா நார்வேயையும் சுவீடனையும் இப் போது எச்சரிக்கை செய்திருக்கிறது. இதன் பொருள் என்ன? பின்லாந்துப் பிரச்னை தீருவதற்குள் நார்வேயும் சுவீடனும் ருஷ்யாவுக்குக் கீழ்ப்படிந்து தம் உயிர் நாடிகளை ஒப்படைக்கவேண்டும். இன்றேல் ஏக காலத்தில் இல்லாவிட் டாலும் பின்னர் தொடர்ந்து, நார்வே சுவீடன் ஆக்ரமிப்பு நடக்கும் என்பதையே ருஷ்யா உணர்த்துகிறது. ஸ்காண்டி னேவிய, பால்டிக் பிரதேசங்களின் நிலை இவ்வாறு கொந் தளித்துக்கொண்டிருக்கிறது.

இனி மூன்றாவது பிரிவாகிய பால்கன் பிரதேசங்களைப் பார்ப்போம். ருமேனியா, ஹங்கேரி, பல்கேரியா ஆகிய நாடுகளில் ருஷ்ய ஆதிக்கம் ஏற்படாதவாறு, இத்தாலி இப் போதே இந் நாடுகளை நாட்டாண்மைச் செய்யத் தொடங்கி விட்டது. இத்தாலியின் நாட்டாண்மையை முன்னிட்டு இங்கு யுத்தம் மூளாவிட்டாலும், பின்லாந்துப் பிரச்னை முடிந்ததும் ருமேனியா யுத்தகளமாக விளங்கக்கூடும். துருக்கி யுத்தத் திற் சிக்காவிடினும் பூகம்பத்தாற் சேதமடைந்து விட்டது.

தாழ்ந்த பிரதேசங்கள் என வழங்கப்படும் பெல்ஜியம், ஹாலந்து ஆகிய இரண்டு நாடுகளும் யுத்தகளங்களாக இன் னும் மாறவில்லையாயினும், நாள்தோறும் இவை பயத்தினல் செத்துச் செத்துப் பிழைக்கின்றன.

இப்படி ஐரோப்பாவிலுள்ள எல்லாச் சிறுநாடுகளுமே ஆபத்தான நிலையில் கிடந்து தவிக்கின்றன. இந்த யுத்தம் விரைவில் சில வாரங்களுக்குள் ஐரோப்பாவின் பலபகுதி களிலே பரவும். ருஷ்யா அல்லது ஜர்மெனியினல் சுவீடன் ஆக்ரமிக்கப்படலாம்.

## இடி முழக்கம்

### மனிதன், யானை, மீன், தேனீ

ஐந்து நாட்களுக்கு முன்னே வட இந்தியாவில் ஓர் அதிசயச் சம்பவம் நிகழ்ந்திருக்கிறது. இராஜபுதனத்தைச் சேர்ந்த தோல்புரி ஜாகீர்தாரின் யானை காட்டுக்குள் நுழைந்து, தன் உரிமைப் படி அங்கிருந்த மரக் கிளைகளை முறித் துக்கொண்டே போயிற்று. ஒரு மரத் தில் மலைத்தேனீக்கள் கூடுகட்டிச் சுக மாக வசித்துக்கொண்டிருந்தன. இம் மரத்தில் கூடு இருந்த கிளையை யானை முறித்ததும், தேனீக்கள் அத் தொந் திரவைச் சகிக்கமாட்டாமல், யானையை ஒருமுகமாய்த் தாக்கி விரட் டியடிக்க முற்பட்டன. கூட்டிலிருந்த மலைத் தேனீக்கள் யானையை மொய்த் துப் பலங்கொண்டமட்டில் கொட் டின.. யானை வீறிட்டலறி ஓடிற்று. சிறிது தூரத்தில் சாய்ந்து மடிந்து விட்டது. தேனீக்கள் அதிக அளவில் தேனை உட்கொண்டால் மயக்கங் கொள்ளுவது வழக்கந்தான் ஆயினும் இச் சம்பவத்தில் தேனீக்கள் மதிமயங் கி யானையைக் கொல்லவில்லை. தமக்கு ஊறு விளைத்த யானையை நேரடியாக எதிர்த்துச் சாகடித்தன. யானையின் உடற்பருமனெங்கே, தேனீக்களின் சிற்றுடல் எங்கே! யுத்தத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஐரோப்பா இதிலிருந்து ஒரு நீதி பெறலாம். அண்மையில் ருஷ்யா வை யானைக்கு ஒப்பிட்டு ஓர் ஐரோப் பியர் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். இராஜபுதன மலைத் தேனீக்கள் செய்த தைப்போல் பின்லாந்துத் தேனீக் கூட்டத்தால் ருஷ்ய யானையைக் கொல்லுதல் ஏலாதாயினும், ருஷ்ய யானையின் ஏராளமான உறுப்புகள் சேதப்படுவதைக் கேள்விப்படுகிறோம். ஜர்மெனி மீன் இனத்தை ஒத்தது. சிறுமீனைப் பெருமீன் விழுங்குவது மீனினத்தின் தரும முறை. ஜர்மெனி இவ்வாறு மீன் இனத்தைப் பின்பற்று கிறது. ஆனல் மனிதன் தேனீ முறை யில் பல அரிய பாடங்களைக் கற்க லாம். தேனீக்கள் ஒரு கூட்டமாகச் சேர்ந்து வசிக்கும். அதில் இராணி ஈ ஒன்றிருக்கும். தேனீக் கூட்டத்தில் எல்லாம் சமம். வேலை வித்தியாசம் உண்டு. பெரியவர் சிறியவர் கிடை யாது, வீடு, வாசல், பொருள் எல் லாம் சமூகச் சொத்து. வீடு கட்டு பவன் உண்டு; வீட்டைக் காப்பவனும் உண்டு! எழுதப்பட்ட சட்டங்கள் கிடையா. எல்லாம் சமூகத்துக்காகச் சரியாக வேலை செய்கின்றன. எவ்வ ளவு அழகான முறை தேனீமுறை! தேனீச் சமூகத்திலுள்ள இராணி வயோதிகமடைந்த பின், தேனீச் சமூ கம் அதை நீக்கிவிட்டுப் புதிய இராணி யை நியமிக்க முயற்சிக்கிறது. ஆனல் பழய இராணி சமயம் பார்த்து எதிர் கால இராணி ஈயைப் பிரசவ அறையி லேயே கொன்றுவிடும். மற்றும் சிறிய சமூகம் பெருஞ் சமூகத்தை எதிர்த்துக் கொல்லவுந் துணியும். இவ் இரு குறை களை மட்டும் ஆறறிவுடைய மக்கள் தவிர்த்துக் கொள்ளல் வேண்டும்.



## ராம்கார் காங்கிரஸ்பற்றி சுபாஷ் போஸ்

### அதற்குள் நிலைமை மாறுமாம்

சமீபத்தில் பம்பாயில் ஸ்ரீ சுபாஷ் போஸைப் பத்திரிகை நிருபர் கண்டு காங்கிரஸ் தலைவர் தேர்தலில் தீவிர வாதி ஒருவர் அபேக்ஷகராக நிற் பாரா எனக் கேட்டதற்கு அவர் கூறியதாவது:—

இந்தத் தேர்தலில் தீவிர வாதி ஒரு வரை அபேக்ஷகராக நிறுத்துவதில் பயனில்லை. நான் எல்லாத் தீவிரவாதி கள் சார்பாகவும் பேசமுடியாது. முன்னேற்றக் கட்சியினரைப் பொறுத்தமட்டில் அவர்கள் ஆங் காங்கு தேர்தலில் கலந்துகொள்வார் கள். அவர்கள் இனி வரவிருக்கும் போராட்டத்தைப்பற்றியே அதிக மாகக் கவனிப்பார்கள். ராம்கார் காங் கிரஸ் கூடுவதற்கு முன் நிலைமை மாறக் கூடும். ராம்கார் காங்கிரஸில் காந்திஜி கோஷ்டியார் ஆதிக்கமே அதிகமாகவிருக்கும். இப்போதுள்ள நிலைமையில் தீவிர வாதிகளுக்கு இத் தேர்தலில் மெஜாரிட்டி கிடைத்தாலும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் அவர்களுக்கு மெஜாரிட்டி இல்லாத வரையில் தீவிரவாதி ஒருவர் தலைவ ராகத் தெரிந்தெடுக்கப்பட்டுப் பய னில்லை.

#### எங்கள் கவலை

பிரிட்டிஷ் கவர்ன்மெண்டோடு சம ரசம் பேசி மீண்டும் காங்கிரஸ் மந்திரி கள் பதவிக்கு வரச் செய்யப்படும் முயற்சியை எவ்விதம் தடுப்பதென் பதே எங்களுக்கு இப்பொழுது பெருங் கவலையாகவிருக்கிறது. தேசியப் போராட்டம் ஒன்றைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி இப்போது ஆரம் பிக்குமென்ற நிச்சயம் எங்களுக் கில்லை. அது ஒரு புறமிருக்கட்டும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொள்கை யுடன் சமரஸமாகப் போகக்கூடா தென்பதே எங்கள் நோக்கம்.

காங்கிரஸ் உத்தியோக முறையில் போராட்டத்தை ஆரம்பிக்காவிட் டால் வேறு ஏதாவது ஒரு ஸ்தாபனம் அதை ஆரம்பித்தாக வேண்டும். முன்னேற்றக் கட்சி இக் காரியத்தில் இறங்கினுல் அதைச் சேர்ந்தவர்கள் காங்கிரஸிலிருந்தே விலக்கப்படுவார் கள்.

முன்னேற்றக் கட்சியினர் காங் கிரஸிலிருந்து ஒருநாளும் பிரிந்து போகமாட்டார்கள். பிரிட்டிஷ் ஏகாதி பத்தியத்தோடு, காங்கிரஸ் சமரச மாகப் போவதானல் காங்கிரஸ் இன் னெரு மிதவாத சபையாகிவிடும்.

காங்கிரஸ் சட்டசபை வேலையி லேயே அதிகக் கவனம் செலுத்து கிறது. அது மீண்டும் போராட் டத்தை நடத்தக்கூடிய ஸ்தாபனமாக விருக்க வேண்டுமென்பதற்காகவே முன்னேற்றக்கட்சி வேலை செய்து வருகிறது.

காங்கிரஸ் நிருவாகிகள் திட்டமாக ஒரு முடிவு செய்யாமல் காலத்தை வீணுக்கி வருகிறுர்கள். இந்தச் சந்தர்ப் பத்தைக் கைநழுவ விடக்கூடாது. பொதுஜனங்கள் போராட்டத்துக்குத் தயாராகவே யிருக்கிறுர்கள். தலைவர் கள்தான் தயாராகவில்லை.

முடிவாக நாம் என்ன செய்ய வேண்டுமென்பதை இப்போது நிர்ண யிக்கமுடியாது. சர்வதேச நிலைமை யைப் பற்றி நாம் சிரத்தையுடன் கவனிக்கவேண்டியிருக்கிறது. தேசியக் கோரிக்கைக்குப் பதிலாக அரசியல் நிர்ணய சபையை அமைக்கும்படிக் கேட்பது போலித் தனமாகும். இது தான் எங்களுக்கு அதிக கவலையைத் தந்திருக்கிறது.

## காரைக்குடி நகரசபை

## முனிசிபல் சங்கு மாலை 7 மணிக்கு முழங்கும்

### சுதந்திர தினப் பிரதிக்ஞையை நினைவூட்ட ஏற்பாடு

காரைக்குடி நகர சபையின் சாதா ரணக் கூட்டமொன்று சென்ற 17—1—40 புதன்கிழமை சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் கூடியது. தலைவர் உட்பட 10 அங்கத் தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

#### உபாத்தியாயர்கள் நியமனம்

9-வது 11-வது 16 வது வார்டு பள் ளிக்கூடங்கள் ஒவ் வொன்றிற்கும் இரண்டு உபாத்தியாயர்கள் வீதம் நியமிக்க அனுமதிக்கப்பட்டது.

#### முனிசிபல் போது வாசகசாலை

முனிசிபல் பொது வாசக சாலைக்கு The Indian Journal of Adult Education என்னும் ஒரு சஞ்சிகை யைச் சேர்த்துக்கொள்ளவும் சந்தா ரூ. 2—8—0 செலுத்தவும் அனுமதிக் கப்பட்டது.

#### கைத் தொழிலுக்குக் கண்ட்ரிபியூஷன்

மதுரை - இராமநாதபுரம் ஜில்லாக் கைத்தொழிலாளர் சங்கத்தாரிடமி ருந்து கண்ட்ரிபியூஷன் கோரி வா லான கடிதம் ரிகார்டு செய்து கொள் ளப்பட்டு கண்ட்ரிபியூஷன் ரூ. 25 அனுமதிக்கப்பட்டது.

#### வாரண்டு ஆபீஸரும் சேவுகனும்

31-3-40 முடிய மாதம் ரூ 30 சம் பளத்தில் ஒரு வாரண்டு ஆபீஸரும், மாதம் ரூ 12 சம்பளத்தில் ஒரு சேவு கனும் நியமிக்க அனுமதிக்கப்பட்டது.

#### மேற்பார்வையாளர்

வீடுகளுக்கு நம்பர் போடும் வேலையை மேற்பார்வை செய்யும் பொருட்டு 4-10-39உ முதல் ரூ 20 சம்பளத்தில் மூன்று மாதத்திற்கு ஒரு மேஸ்திரி நியமித்ததற்கு அனும திக்கப்பட்டது.

#### சொத்துவரி வியாஜ்ஜியம்

சொத்துவரிபாக்கி வசூலிப்பதற் காக ஸ்ரீ கு. ராம. சித. சின்னக் கருப்பனம்பலம் பேரால் ரூ 108-11-0-க்கும், ஸ்ரீ மெ. செ. ராமசாமிசெட்டியார் அண்ட் மௌன சாமி பேரால் ரூ 54-6-0க்கும், நாகநாதபுரம் பெருமாள் கோவில் டிரஸ்டி பேரால் ரூ 135-14-4-க்கும், சிவில் வியாஜ்ஜியம் தொடர அனுமதி யளிக்கப்பட்டது.

#### உபகாரச்சம்பளம்

கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தம் முதலியார் அவர்களுக்கு முனிசிபல் கவுன்ஸிலால் கொடுக்கப்பட வேண் டிய உபசாரச் சம்பளம் மாதம் ரூ 21 வீதம் 1-7-39 முதல் கொடுக்க அனுமதிக்கப்பட்டது.

ஹெல்த் ஆபீஸருக்கு முனிசி பாலிடியால் கொடுக்கப்படவேண்டிய விடுமுறை நாட்சம்பளமும், உபகா ரச்சம்பளமும் மாதம் ரூ 7-2-0 வீதம் 1-7-39 முதல் கொடுக்க அனுமதிக் கப்பட்டது

#### காம்பவுண்டு சுவரும் பால்கனியும் கட்டிக்கோள்வது பற்றி

இவ்வூரில் கட்டிடங்களின் தளம் உயரமாகக் கட்டப்படுவதால் காம் பவுண்டு சுவர்கள் குறைந்தது 8 அடி உயரத்துக்குக் கட்டிக்கொள்ளவும். இவ்வூரில் இடமில்லை அதிகமாகவிருப் பதால் வீட்டுக்கு முன் ஒதுக்கும் 4 அடி இடத்தில் பால்கனி வைத்துக் கொள்ளவும், அனுமதிக்கும்படி அர சாங்கத்தாரைக் கேட்டுக் கொள் வதென்று தீர்மானிக்கப்பெற்றது.

#### தீர்மானங்கள்

துரைசிங்க நகரில் மார்க்கெட்டுக் காக ஒதுக்கி வைத்திருக்கும் சுமார் மூன்று ஏக்கர் உள்ள இடத்தை முனி சிபல் மார்க்கெட்டை நடத்துவதற் காக உடனே அக்வயர் செய்கிறதென் றும் இதற்கு ஒரு குறைந்தரேட்டுக்கு இடத்தைத் தரும்படி சிவகங்கை சமஸ் தானத்தைக் கேட்டுக் கொள்ளுகிற தென்றும், புதிய முனிசிபல் ஆபீஸ் கட்டிடக் காம்பவுண்டின் ஒரு பாகத் தில் நான்கு டிராவலர்களின் ரூம்கள் கட்டுவதென்றும் முனிசிபாலிட்டியில் உள்ள சாக்கடை, குப்பை வண்டிக ளுக்குச் சொந்தத்தில் மாடு வாங்குகிற தென்ற பழைய தீர்மானத்தின்படி வருகிற ஏப்ரல் மாதத்திற்குள் கட்டா யம் மாடுகள் வாங்க வேண்டுமென் றும் கவுன்சிலர் ஸ்ரீ பழ. நாச்சியப்பன் அவர்களால் கொண்டுவரப்பட்ட தீர் மானங்கள் கவுன்சிலர் ஸ்ரீ சொ. நாரா யணன் அவர்களால் ஆமோதிக்கப் பட்டு ஏகமனதாக நிறைவேறின.

#### கோட்டையூர்க் கும்பாபிஷேகம்

இராமநாதபுரம் ஜில்லா ஹெல்த் ஆபீஸரின் கடிதமும், கோட்டையூர் ஸ்ரீ மு. தெ. அ. மு. முத்தையா செட்டியாரின் கடிதமும் படிக்கப்பட்டன. இவ்விருவருடைய கோரிக்கைகளின்படி 19, 20, 21 ஆகிய மூன்று தேதிகளுக்கு வாட்டர் லாரியை அதற்குள்ள கட்டணத்தைப் பெற்றுக்கொண்டு கொடுக்கும்படி அனுமதிக்கப்பட்டது.

#### எஸ்டிமேட்டுகள்

முனிசிபல் ஆபீஸ் காம்பவுண் டில் அப்ரோச் ரோடு போட எஸ்டிமேட் ரூ 425-ம் முனிசிபல் ஆபீஸ் கட்டிடத்திற்கு காம்ப வுண்டு சுவர் எடுக்கவும் அடைப்பு அடைக்கவும் எஸ்டிமேட் ரூ 3950-ம் முனிசிபல் காம்பவுண்டில் மரங்கள் வைத்துப் பயிர்செய்ய எஸ்டிமேட் ரூ 300-ம் அனுமதிக்கப்பட்டன.

#### சுதந்திரதினத்துக்குச் சங்கு

26-1-40 மாலை 7 மணிக்கு சுதந் திர பிரதிக்ஞை எடுத்துகொள்ள வேண்டுமென்பதை பொதுஜனங்க ளுக்கு அறிவிக்கும் பொருட்டு முனி சிபல் சைரனை (சங்கு) அன்று மாத் திரம் மாலை 7 மணிக்கு ஊத அனு மதிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

## இராமச்சந்திரபுரம்

12-1-40 மாலை ஸ்ரீ ராமகிருஷ்ண வாலிபர் சங்கத்தினரால் "விவேகா நந்தர் பிறந்ததின விழா" திருவாளர் வ. சு. சுப. சுப்பிரமணியன் செட்டி யார் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீமதி ஞானம்பாள் இறைவணக்கம் பாடினர். ஆசிரியர் வீராசாமி அய்யர் "விவேகாநந்தரின் தொண்டு" என்பது பற்றிப் பேசினர். டாக்டர் வி. சண் முகம் "விவேகாநந்தரின் வாழ்க்கைச் சரிதை" எனும் பொருள்பற்றிச் சொற் பொழிவாற்றினர்கள்.

## ஷண்முகநாதபுரம்

### ஜவஹர் வாசகசாலை

12-1-40 மாலை வித்வான் ஸ்ரீ அரு. சோமசுந்தரன் தலைமையில் சொற்பொழி வுக் கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ ராம. சிதம்பரம் "மொழிமாண்பு" என் பது பற்றியும், ஸ்ரீ சா. மு. விஸ்வநாதம் "தனவணிக சமூகசீர்திருத்தம்" என்பது பற்றியும் பேசினர்கள். காரியதரிசி சொ. மெய்யப்பன் வந்தனோபசாரம் கூறி னர்.

## பித்தம் தலைக்கேறுகிறது

### 'பக்த சேதா'வுக்கு மதுரையில் எதிர்ப்பாம்!

பக்த சேதா படத்தைக் காரைக் குடி வாசிகளினுள் பெரும்பாலரோ் பார்த்திருப்பார்கள். இன்னும் சுற்றுப் புறத்திலிருந்து ஏராளமான மக்கள் பார்த்துவிட்டுப் போய்க்கொண்டே யிருக்கிறுர்கள். ஆனல் நமக்குப் புலப் படாத ஒரு பெரிய விஷயத்தை மது ரையில் சிலர் கண்டுபிடித்து இப் படத்தை ஆட்சேபித்தார்களாம். அந்த அதிசயத்தைக் கேளுங்கள்.

படத்தில் பகவானுடைய விக்ரகம், கோயில், குளம், ஆகியவைகளெல் லாம் இருக்கின்றனவல்லவா! யாரைக் கேட்டு இப்படிப் படம் பிடித்தார்கள் என்று மதுரைச் சநாதனிகளிற் சிலர் நடுத்தெருவில்நின்றுகுதிக்கிறுர்களாம். 'கொண்டா' மகாபாரதத்தை என்கி ருராம் ஒருவர். இதற்குள் மகாபார தத்தைத் தேடிக்கொண்டு வடக்கே ஓடியிருக்கிறாரும் ஒருவர். இன்னும் ஒருவர் வடநாட்டு மகாபாரதம் மகா பாரதமே அல்ல என்று வடமொழிச் சுலோகங்களை ஏராளமாய்ப் பொழிந் துத் தள்ளுகிருராம். ஒரு சநாதன ராவ்பகதூர் இப்படத்தில் ஒரு காப் பியை விலை விசாரிக்கப்போகிருராம். அது வரிசைக்கிரமமாக கவர்னர், வைஸ்ராய், மன்னர் வரையில் காட் டப்படுமாம். இன்னும் என்னென்ன கூத்துகள் நடக்கப்போகின்றனவோ! இவைகளையெல்லாம் சேர்த்து ஒரு தனிப்படம் தயாரிக்கலாம்போலிருக் கிறதல்லவா?

ஆனல் நம் காரைக்குடி கீழ வூரு ணியின் மேற்கு மூலையில் செருப்புத் தைக்கிற ஒருவன் 'ஹரி ஹரி' என்று சொல்லிக்கொண்டே யிருக்கிறுன். மதுரை விஷயத்தைக் கேட்டபின், இப்படி நாமாவளி பாடுவதும் ஆட்சே பிக்கப்படலா மென்று நினைத்து அவ னிடம் பலர் சொன்னுலும் அவன் பயப்படமாட்டேன் என்கின்றுன். கடைசியில்தான் துரோணுச்சாரிக்கு உண்மை விளங்கிற்றென்று கூறிக் கொண்டே 'ஜய ஜய ராம் ராம் முகு ந்த ஹரி ஹரி' என்று பாடுகிறுன்.

இப்படி மதுரைச் சநாதனிகளின் கண்ணில் படுவதெல்லாம் தீண்டாமை விலக்கும் ஆலயப்பிரவேசமுமாகவே காட்சியளித்துக் கொண்டிருக்கின்ற உண்மை, இந்தக் கலியுகத்திலும் நடக் கின்ற ஒரு பெரிய அதிசயமல்லவா!

—விக.

இந்தியாவில் செய்யப்பட்ட விஷ வாயு முகமூடிகள் புதிய டில்லியில் இப் போது ஏராளமாக விற்கப்படுகிறதாம்

• •

ராம்கார் காங்கிரஸ் பிரதிநிதியாக எம். என். ராயும் விஷ்ணு சரண் தப் ளியும் போட்டியின்றி மீரத் தொகுதி யில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறுர்கள்.

• •

ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் 14உ மதுரையிலுள்ள ஒரு வாசகசாலையின் ஆண்டுவிழாவுக்குத் தலைமை வகித்தார். ஸ்ரீ முத்துசாமி வல்லத்தரசு பேசினர்.

• •

திருச்சி நகரசபை ராஜாஜியின் விஜயத்தின்போது ஒரு வரவேற்புப் பத்திரமளிக்கவும் காந்தி மார்கெட் டைத் திறந்துவைக்க ஏற்பாடு செய்ய வும் தீர்மானித்திருக்கிறது.

• •

அகில இந்திய நூற்போர் சங்கத் தின் கேரளக் கிளைச் சங்கத்தாரிடம் ரூ 80,000க்குக் கதர் விற்பனையாகா மல் இருக்கிறதாம். இம் மாதம் 26ந் தேதி சுதந்திர தினத்தன்று இக் கதரை வீடு வீடாய்ச் சென்று விற் பார்கள்.

விமர்சனம்

# பக்த சேதா

ஆ. கா.

பக்த சேதா நல்லபடம். இது ஒரு வெற்றிதான்.

புதிதாகச் சினிமாவில் பிரவேசித்திருக்கும் ஜி. சுப்புலட்சுமியின் அழகு, நடிப்பு, சாரீரம், சங்கீதம் இவை நான்கும் படத்தின் வெற்றியில் பெரும் பங்கை வகிப்பதாய்ச் சொல்லலாம். வெற்றியில் மிகுதிப்பாகப், தற்கால நிலைக்கு ஏற்றவாறு இப்புராணக் கதையைத் தேர்ந்தெடுத்து இதைச் செவ்வையான முறையில் பட உருவத்துக்குக் கொண்டு வந்திருப்பதே யாகும்.

## நடிகர்கள்

பக்த சேதா படத்தின் கதைச் சுருக்கத்தைச் சென்றவார ஊழியனில் வாசகர்கள் வாசித்திருக்கலாம். அதிலுள்ள பாத்திரங்களை நடித்துள்ளவர்களின் விபரம் வருமாறு:

பாபநாசம் சிவன் ... ... பக்த சேதா
கொத்தமங்கலம் சுப்பு ... துரோணச்சாரியார்
ராஜகோபாலய்யர் ...... துரியோதனன்
ராமசுவாமி அய்யங்கார்...மகாவிஷ்ணு
மாஸ்டர் திருமலை ... ... ... சேவா
ராஜகோபாலய்யர் ... ... சோமதத்தன்
சதாசிவம் ... ... ... ... எக்னேசுவரன்
ராமானுஜாச்சாரி, ... ... ... ... சகுனி
ஜாலி கிட்டுவய்யர் சாது சித்தானந்தா
ராமச்சந்திரய்யர். ...பூக்கார முனியன்

ஸ்ரீ மதி ஜி. சுப்புலட்சுமி ... சாந்தா
,, எஸ் ஆர். ஜானகி ... ... காந்தா
,, வி. சுப்புலட்சுமி பூக்கார முனியம்மா
,, குமாரி ரத்தனம் ... ... தேசாந்திரி

சேவா பாத்திரத்தில் வரும் மாஸ்டர் திருமலை மிகத் திறம்பட நடித்திருக்கிறான். அவன் செருப்பைச் சுமந்துகொண்டு வீதிவழியே சென்று

"செருப்பு வாங்கலையோ-நல்ல
நல்ல செருப்பு வாங்கலையோ"

என்று பாடிக்கொண்டு வரும்போது, அவனை நிறுத்திப் பாடவைத்து, அல்லது அவனுடைய முகமலர்ச்சியில் பூரித்துச் செருப்பைப் பார்க்காமலே அதற்கு விலைகொடுத்து வாங்கிக் கொள்ளலாம் போலிருக்கிறது. இத்துடன் அச் செருப்பும் காலுக்கேற்றபடி உறுதியாயும் அழகாகவும் இருந்துவிட்டால் கேட்கவா வேண்டும்? துரோணருடைய சீடர்கள் பூமாலையைக் கொடுத்து அவனை ஏமாற்றித் தான் செருப்புவாங்கிக் கொண்டார்கள். சேவா திரும்பிக்கொண்டிருக்கும்போது சீடர்கள் ஜாடைகாட்டிப் பேசிக்கொள்வதிலிருந்தே இது தெரிகிறது!

ஆனல் சேவா ஏமாந்ததாய்ச் சொல்லமுடியாது. இதை மாஸ்டர் திருமலை நன்ருக எடுத்துக் காட்டியிருக்கிறன். தன் வீட்டிலுள்ள பகவானுடைய விக்ரகத்துக்கு அணியலாமென்ற மனப் பூரிப்புடன், அவர்களிடமிருந்த புஷ்பமாலையை வாங்கிக் கொண்டு, குதூகலத்துடன் குதித்தோடி வந்து, தன் தாயாரிடம் காட்டாமல் பின்புறமாய் மறைத்துக் கொண்டே ஏதோ ஒரு பெரிய கிடைத்தற்கரிய பொக்கிஷத்தைக் கொண்டு வந்திருப்பதுபோல் சேதி சொல்லுகிறன். இப்பகுதி நன்ருயிருக்கிறது.

சேவா சாந்தாவை முதலாவதாகச் சந்திக்கும் போதும், அவளுடைய காலில் முள் தைத்த சமயம் தன் கண்ணில் பட்டதேபோல உணர்ந்து முள்ளை எடுக்கும்போதும், சாந்தாவுடன் சேர்ந்ததால் கல்லாலடிபட நேர்ந்ததென்பதைச் சாந்தாவிடம் சொல்லி அவளுடன் சேர மறுக்கும் போதும், பின்னர் பிராயச்சித்த விஷயத்தை யறிந்து தன் சேரிக்குப் போய்ப் பிள்ளைகளை யழைத்து வரும் போதும் மாஸ்டர் திருமலை மிகச் சாமர்த்தியமாய் நடித்திருக்கிறன். கெட்டிக்காரன்.

இவனுடைய பாட்டும் கேட்கத் தக்கது. இனிய சாரீரம்.

சாந்தாவாக நடிக்கும் ஜி. சுப்புலட்சுமி தன் பாத்திரத்தை நன்கு உணர்ந்து நடித்திருக்கிறர். சேதா வீட்டில் பகவானை நேரில் தரிசிக்கிறபோது ஏற்பட்ட பிரம்மிப்பையும் அதில் திளைக்கும் ஆனந்தத்தையும், தன் முக மாறுதலின் மூலம் அப்படியே காட்டுகின்ருர். அந்தப் பேரானந்தத்தில் மூழ்கிச் சுகங்கண்ட அந்தப் பெண், மோகன மயக்கங்கொண்டு,

"கண்டேன், கண்டேன்
கண்டேன்—கமலப் பதமவர் கண்
டேன், கண்டேன்.
நீலமேக சியாமள மேனி, கோலமும்
உடை கனகாம்பரமும் கண்டேன்
கண்டேன்......."

எனப் பாடிய வண்ணம் சுற்றிக் கொண்டு, கீழே விளையாடும் குழந்தைகளைத் தூக்கிப்போட்டுப் பிடிப்பதுமாய் புஷ்பங்களை வாரியிறைப்பதுமாய், ஆடிப்பாடிக் கண் தெரியாமல் மெய்மறந்து கும்மாளமடிக்கிற கட்டம், ஜி. சுப்புலட்சுமியின் நடிப்புத் திறமையைச் சுட்டிக்காட்டுகிற சிகரம்.

பிராயச்சித்தத்துக்காக வேண்டி, சேரிப் பிள்ளைகளைத் திரட்டி, அவர்களுடன் மிகத் தோழமை பாராட்டி ஓய்யார நடைபோட்டுக்கொண்டு வருவதும், தன் அறையைப் பாதுகாக்கிறவர்களை ஏமாற்றுகிற பாசாங்கும் சம்பாஷணையும் நன்ருயிருக்கின்றன.

ஜி. சுப்புலட்சுமியைச் சில மாதங்களுக்கு முன் சென்னையில் பார்த்த போது, சினிமாத் தொழிலில் இவர் பிரக்யாதி பெறுவாரென்று உறுதியாக அறிந்திருந்தேனயினும், முதற் படத்திலேயே இவ்வளவுதூரம் நல்ல பல அநுபவ நடிகைகளை விடவும் சமர்த்துடன் நடித்துவிடுவாரென்று நான் எதிர்பார்க்கவில்லை. சில நடிகைகளும் சரி, நடிகர்களும் சரி, "முதல் படம் சார் இது. அடுத்த படத்தில் பாருங்களேன், நான்மட்டும் புரிந்து கொண்டிருக்கிற பிறருக்குத் தெரியாத பல விஷயங்களைத் திறம்பட நடித்துக் காட்டுகிறேன்" என்று சொல்லாமல் சொல்லுவார்கள்.

ஜி. சுப்புலட்சுமி இம் மாதிரியான மன்னிப்பைத்தானும் கோரவேண்டியதில்லையாயினும், அவர் மேலும் மேலும் விருத்தியடைவார் என்று எதிர்பார்ப்போமாக.

இவருக்கு நல்ல அழகு, பாட்டு, கனிப்பான சாரீரம்.

அடுத்தபடியாக பக்தன் சேதாவாக நடிக்கும் பாபநாசம் சிவன் சுமாராகத் தன் பாத்திரத்தை நடித்திருக்கிறர். பாட்டும் அப்படித்தான். ஆரம்பத்தில் இவருடைய பாத்திரத்தில் ஏற்படுகிற பயம் வர வர நீங்கிவிடுகிறது.

துரோணச்சாரியாராக நடிக்கும் கொத்தமங்கலம் சுப்பு பக்த சேதா படத்தில் அபிவிருத்திகாட்டியிருக்கிறாராயினும், இவரிடம் நடிப்புத் திறமை இன்னும் அதிகமாயிருக்கின்றதென்று நினைக்க இடமேற்படுகிறது. இவர் இன்னும் சிறிது சிரமப்பட்டு உணர்ச்சியுடன் நடிப்பாராயின் அடுத்த படத்தில் நல்ல கீர்த்தி பெறலாம்.

எஸ். ஆர். ஜானகியின் நடிப்பும் புகழத்தக்கது. அவர் கண்களைப்பிடுங்கிக்கொள்ளும்போது என் இடது தோளில் ஒரு சொட்டுக் கண்ணீர் விழுந்தது. வலது புறத்திலிருந்தவர் 'ஐயோ ஐயோ' என்று அலறியேவிட்டார்.

ஏனைய நடிகர்கள் அவரவர் பாத்திரத்தைப்பூர்த்தி செய்திருக்கிறர்கள்.

### டைரக்ஷனும் இதர அம்சங்களும்

இப் படத்துக்கு நன்ருகச் சினரியோ தயாரித்துக்கொண்டு தக்க முறையில் எடிட் செய்திருக்கிறர்கள். அடேயப்பா, எத்தனைச் செருப்புகள்! கொட்டிவிட்டார்கள் கொட்டி! சேரியில் நெருப்புப் பிடிக்கிற கட்டம் எல்லோர் மனதையும் உருக்கத் தக்கது. சேவா சாந்தாவின் கட்டையவிழ்த்துக் காப்பாற்றியதும் நாற்புறமும் நெருப்புளரிய தெய்வமேதுணையென்று இருவரும் விக்ரகத்தின் கால்களைப் பின்னிக்கொள்கின்றனர். காந்தாவும் சேதாவும், நெருப்பின் ஊடே புகுந்து விக்ரகத்தை நாடிவந்து இவர்களுடன் சேர்ந்துகொண்டு

ஜே ஜே ராம் ராம்—
முகுந்த ஹரிஹரி
ஜே ஜே ராம் ராம்—
முகுந்த ஹரிஹரி
ஜே ஜே ராம் ராம்—
முகுந்த ஹரிஹரி

என்ற கோரஸ் நாமாவளியில் ஈடுபட்டிருக்கும்போது, பகவான் இவர்களை நெருப்பிலிருந்துக் காப்பாற்றக் கீழே யிறங்கி இவர்களுக்குத் துணையாயிருப்பதும், பகவானுக்கு வெகுதூரத்துக்கப்பால் அவர் கண்முன்கூட இல்லாமல் தீண்டப்படாதவர் போல! துரோணச்சாரியாரும் அவருடைய சீட கோஷ்டிகளும் நின்றுகொண்டு

'ஜே ஜே ராம் ராம்
முகுந்த ஹரிஹரி'

என்று பாடுவதும், பின்னர் பகவான் தீயை அடக்கிப் பழைய நிலையை உண்டாக்கியபின், துரோணர் உள்ளே நுழைந்து சக்கிலிய பக்த சேதா காலில் விழுவதும் மிக ரஸிக்கத் தகுந்த அற்புத கட்டங்கள். நாமும் அந்த நாமாவளியில் மெய்மறந்து ஈடுபட்டு, கைகூப்பா விட்டாலும் 'ஹரிஹரி' என்று கைகொட்டுகிறோம்.

படத்தின் வெற்றியில் பெரும்பங்கு ஜி. சுப்புலட்சுமிக்கென்று சொன்னேனல்லவா? ஆனல் இந்தப் பங்கு முழுவதையும் அவர் ஸ்ரீ கே. சுப்ரமண்யம் அவர்களிடம் சேர்த்துவிடுவாரென்ற நம்பிக்கையுடன்தான் நான் அவ்வாறு சொன்னேன். ஏனெனில், ஜி. சுப்புலட்சுமியை இவ்வளவு சிறப்பாகச் சினிமா உலகில் சிருஷ்டித்திருப்பது அவர்தான்.

ஒரு படத்துக்கு விமர்சனம் என்ருல் சில குறைகளைச் சொன்னல் தான் பூர்த்தியானதாகக் கருதப்படும். ஆகவே ஒன்றிரண்டைச் சொல்லுகிறேன்.

சேதாவின் கண்களைப் பிடுங்கவும் கரங்களை வெட்டவும் போகிற தருணத்தில் காவலாளிகள் நீண்ட நேரம் பாடிக்கொண்டு ரம்பத்தை அரத்தால் ராவிக்கொண்டிருக்கவேண்டியதில்லை. ஒருவன் கொல்லம்பட்டரை போட வேண்டியதில்லை. நீண்ட நேரத்தால் பயங்கரம் பாதிக்கப்படுகிறது.

சபா மண்டபத்தில் கொண்டுபோய் நிறுத்தப்பட்ட சேதா பாடுகிறன். துரியோதனன்தான் மடையன் என்ருல், துரோணர்கூட சேதாவின் சங்கீதக் கச்சேரியைக் கேட்டுக்கொண்டிருப்பாரா? இது சுத்தப் பைத்தியக்காரத் தனமல்லவா? என்பக்கத்திலிருந்தவர் இதைவாய்விட்டுச் சொல்லியேவிட்டார்.

அடுத்தபடியாக, சக்கிலியக் குடும்பம் தற்கால நடுத்தரக் குடும்பம் போல காட்டப்படுகிறது. அவர்கள் பேசுகிற வசனம் துரோணச்சாரியாரை விடச் சுத்தமாயிருக்கிறது. சக்கிலியப் பெண் காந்தா ஓர் இடத்திலே கேட்கிறள்:

"ஏன் நாதா! பணம் வாங்கிண்டு வந்தேளோ?"

இன்றைக்குக்கூட சக்கிலியர்களைச் சுட்டுப்போடுவதாயிருந்தாலும் அவர்களுடைய வாயிலிருந்து இப்படிப்பட்ட வார்த்தைகள் பிறக்கமாட்டா.

இந்தக் குற்றத்திற்கு முழுப் பொறுப்பையும் டைரக்டர் ஸ்ரீ கே. சுப்ரமண்யத்தின் மீது சுமத்துவதற்கில்லை. வசன மெழுதிய ஸ்ரீ கே. சுப்பிரமண்யமே இக் குறைபாட்டுக்கு அதிகப் பொறுப்பாளி!

இன்னேர் இடத்தில் கொல்லர் தெருவில் ஊசி விற்கவில்லையாயினும், பூகம்பத்தால் இடிந்துவிழுந்த சிறைச் சாலையிலே ஊசிவிற்கிற அதிசயத்தைப் பார்க்கிறோம்.

பொதுவாக, இப்படியே தேடிப் பிடிக்கவேண்டிய சில்லறை அம்சங்களைத்தவிர, படம் நன்ருக எடுக்கப்பட்டிருக்கிறது. ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு, ஜோடனைகள், மேக்கப் மெச்சத்தக்க முறையிலிருக்கின்றன.

தமிழர்கள் பார்க்கவேண்டிய படம், ஹாஸ்யமுண்டு ஆனல் கதையில் சம்பந்தப்படாததல்ல. படம் சீக்கிரத்திலும் முடிந்துவிடுகிறது.

ஜே ஜே ராம் ராம் முகுந்த ஹரிஹரி!

## இலட்சுமிபுரம்

இலட்சுமிபுரம், ஸ்ரீ மீனட்சி சங்கத்தின் 14வது ஆண்டு 9வது மாதக்கூட்டம் (13–1–40) மாலை 4மணிக்கு ஸ்ரீ ந. சொ. அரு. அருணசலம்செட்டியார் தலைமையில் நடைபெற்றது. மாணவர் மாணவியரின், பாட்டு, பேச்சு, நடிப்பு, தேவாரம், முதலியவற்றின் பின்னர், தலைவரவர்கள், சுத்தப்பரிசிலனைப் பரிசுகளை வழங்கி முடிவுரை கூறியதும், மாலை 6–30 மணிக்கு கூட்டம் நிறைவெய்தியது. எனக்காரியதரிசி அறிவிக்கிறர்.

9—1—40 மாலை கல்கத்தா திருவாளர் மாதுர்பூதம் ஐயர் தலைமையில் ஒரு கூட்டம் நடந்தது. ஸ்ரீ கே. சுப்ரமண்யம் விவேகானந்த சுவாமிகளின் வரலாற்றை எடுத்துரைத்தார். மாணவ மாணவிகள் பாட்டு, பேச்சு, நடிப்பு, தேவாரம் முதலியன நிகழ்த்தினர். திரு. எம். இராமநாத ஐயர் விவேகானந்தரின் உபதேசங்களை விரித்துரைத்தார்.


## ஜோதிஷம்

உங்கள் எதிர்கால பலன்களை மாதவாரி விவரமாக ஒரு வருஷத்திற்கு எழுத ரூ 3. வாராந்திர பலனை எழுத ரூ. 10. எதிர்கால சந்தேகங்களை தெரிந்துகொள்ள 5. கேள்விகளுக்கு பதில் எழுத ரூ. 1. கிரஹசார தோஷங்கள் நீங்கி எல்லா காரியங்களிலும் ஜெயமடைய ஜயவசீகரணி கவசம் ரூ. 2. வி. பி. செலவு 0-5-0



ஜனனகால விவரம் ஜாதக நகல் அல்லது முழுப்பெயர், கடிதம் எழுதும் போதுள்ள நேரம், சுமார் வயது, தொழில் இவைகளைக் குறிப்பிட்டு எழுதவும்.

வி. கே. சடகோபாச்சாரியார்,
ஹனுமான் ஆச்சர்மம் திருத்தனி S.I.



## கோனேஜின்

வெட்டை, வெள்ளை, மேகம், நீர்க் கடுப்பு, நீர் எரிச்சல், நீர் அடைப்பு, நீரில் ரெத்தம்காணுதல் மற்றும் வெட்டையால் ஏற்பட்ட நீர் நோய்களுக்குச் சிறந்த ஔஷதம்.

(விலை ரூ 2)
(இஞ்சக்ஷன் தேவையில்லை.)

Prep. by:-
Dr. V. S. S. Moni, L. M. S. H.
KARAIKUDI.

ஏஜண்டு:—
AS. AS. ஷண்முகம் ஸ்டோர்ஸ்,
தெண்டாயுதபாணி மெடிகல் ஹால்,
காரைக்குடி.




காந்தியடிகளின் 'ஹரிஜன்' கட்டுரை

# இந்தியா, இங்கிலாந்து, பின்னர் உலகம்

## எல்லோரையும் அகிம்சை வாதிகளாக்குவதே என் வேலை

### இந்தியர்க்குரிய கருவி சர்க்காவே

### இதில் நம்பிக்கையில்லாவிடில் நான் ஒதுங்கிவிடுகிறேன்

★

நூற்பதைப்பற்றித் தங்கள் அபிப்பிராயத்தை ஒளிவுமறைவு இல்லாமல் வெளியிட்ட சோஷியலிஸ்ட்கள், ராயிஸ்ட்கள் மற்றவர்கள் இவர்களுக்கு நான் வாழ்த்துக் கூறுகிறேன். தேசத்தின் நிலைமை மிக்க நெருக்கடியானதாகவிருக்கிறது. சட்டமறுப்பு இயக்கத்தைத் தீவிரமாக நடத்தினல் சரியான சமரசம் ஏற்படும் வரையில் அந்த இயக்கத்தை நிறுத்தவே முடியாது. போராட்டம் அஹிம்ஸா முறையில் நடத்தப்படவேண்டுமானல், அஹிம்ஸா தர்மம் பரிசுத்தமாகவும் கலப்பில்லாததாகவு மிருக்கவேண்டும். போராட்டத்துக்கு என்ன என்ன அவசியமென்பதைக் கூறுவதில் நான் எவ்வித தாட்சண்யமும் காட்டமுடியாது. நான் அவ்விஷயத்தில் தயங்கினல் தேசிய லக்ஷியத்திற்கு தீங்கிழைத்தவனவேன். வெற்றிக்கு அவசியமாக நான் கருதும் யோக்கிய தாம்சங்களில்லாத ஒரு சேனைக்குத் தலைமை வகித்து நடத்த நான் துணியமாட்டேன்.

அரைகுறை மனதுடன் காட்டப்படும் விஸ்வாசத்தால் பிரயோஜனமில்லை. அவ்வித விஸ்வாசத்தால் பெரும் கெடுதியேவிளையும். காங்கிரஸ் சார்பில் பொறுப்பை நானே என் தலை மீது சுமத்திக் கொள்ள வில்லை யென்பதை என்மீது குறை கூறுவோர் உணர வேண்டும். நான் சர்வாதிகாரியல்ல. எவர் மீதும் எனது இஷ்டத்தை வற்புறுத்த எனக்கு அதிகாரமில்லை. ஆகவே நான் ஜனங்களின் ஊழியன் என்று கூறிக்கொள்கிறேன். சம்பிரதாய தோரணையில் நான் சேனதிபதியாக நியமிக்கப்படவில்லை யென்பதையும் ஜனங்கள் அறிந்து கொள்ளவேண்டும். காரியக் கமிட்டி அவ்விதப் பட்டம் அளிக்க விரும்பவில்லை என்பதல்ல. அவ்விதப் பட்டத்திற்கு அவசியமில்லையென்று நான் கூறியதைக் காரியக் கமிட்டி மெம்பர்கள் ஏற்றுக்கொண்டார்கள். ஒரு ஜெனராலுக்கும் அவரது தோழர்களுக்கும் பூரண அன்பும் நம்பிக்கையும் இருக்க முடியுமானல், இதற்கு அதுவே உதாரணம்.

காங்கிரஸ் இஷ்டப்பட்டால் என்னை புறக்கணித்து தன் இஷ்டப்படி தீர்மானிக்கலாம். அதனைத்தடுக்க எதுவுமில்லை. எந்த நகரோ எந்த மாகாணமோ எந்த ஜில்லாவோ சொந்தப் பொறுப்பில் சட்டமறுப்பு ஆரம்பிப்பதைத் தடுக்கவும் எதுவுமில்லை. அப்படி நடப்பது காங்கிரஸ் கட்டுப்பாட்டுக்கு விரோதமானது. ஆனல் அவ்வித அடங்காப்பிடாரித்தனம் சம்பந்தமாக எதுவும் செய்ய என்னல் முடியாது.

ஆகவே, நான் சர்க்காவைப்பற்றி வாதம் செய்வது அனாவசியமாகவிருக்கலாம். ஒவ்வொரு சத்யாக்ரகிக்கும் சர்க்கா மிக்க அவசியமென்று சொல்லுமட்டுமே போதும்.

### எனது வேலை

ஆனல், நான் எதிரிகளின் மனதை மாற்றும் வரையிலோ, அல்லது தோல்வியடையும் வரையிலோ சர்க்காவின் விசேஷத்தை வற்புறுத்திக் கொண்டே இருக்க நேரவேண்டும். அரசியல், பொருளாதார, சமூக, மத விஷயங்களில் பரஸ்பரம் சம்பந்தங்களை சரிப்படுத்த அஹிம்சா தர்மமே சிறந்த முறை என்ற அபிப்பிராயத்திற்கு, ஒவ்வொரு இந்தியனையும், இங்கிலீஷ்காரனையும், முடிவில் உலகத்தையும் மாற்றுவதே எனது வேலையாகும். இதில் நான் பேராசை பிடித்தவனாக விருக்கிறேனென்று குற்றஞ்சாட்டினல், நான் அவ்வித குற்றத்தை ஒப்புக்கொண்டே தீரவேண்டும். எனது கனவு கைகூடாதென்று கூறினல், நான் 'அப்படியுமிருக்கலாம்' என்று கூறிவிட்டு, எனது வேலையிலேயே முனைந்திருப்பேன். நான் பயிற்சி வாய்ந்த அஹிம்சா சோல்ஜர். எனது நம்பிக்கையை விடாதிருக்க அத்தாட்சியுமிருக்கிறது. நான் எனது சோதனை நீடித்து நடத்தியே தீரவேண்டும்.

ஒரு தனி ஆங்கிலேயரிடமும் எனக்கு துவேஷமில்லை யென்பதை முதலில் எனது சகாக்கள் உணரவேண்டுமென்பது எனது விருப்பம். இங்கிலீஷ்காரரை விரட்டுவதில் எனக்கு சிரத்தை கிடையாது. இந்தியாவை ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்தவனக விருப்பதற்கும் அப்படி இருப்பதாக நம்புவதற்குப் பதிலாக இந்தியாவின் ஊழியனகும் படி ஆங்கிலேயரை மாற்றுவதிலேயே எனக்கு சிரத்தை உண்டு. அவரிடம் எனது உணர்ச்சி இந்தியரிடம் எனது உணர்ச்சி போன்றதே. இந்தக் குணத்தை பெருதவர்கள் என்னைப் போல் சத்யாக்ரகிகளாக விருக்க முடியாது.

### அன்பின் லக்ஷணம்

பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை என்னை விடக்கண்டித்தவர் இருக்க முடியாது. எனது அபிப்பிராயப்படி அன்பு ரோஜாப்பூவின் இதழ்போல மேன்மையாக விருக்கு மானல் அது இரும்பு போல் கடுமையாகவுமிருக்கக் கூடும். எனது மனைவி விஷயத்தில் எனது அன்பு இரும்புபோல் கடுமையாகவே இருந்திருக்கிறது. எனது மூத்த மகன் விஷயத்திலும் அப்படியே இருக்கிறது.

சுபாஷ் பாபு எப்பொழுதும் எனது மகனைப் போலிருப்பாரென்று எண்ணினேன். எண்ணம் பலிக்கவில்லை. நானே அவர் மீது தடை ஏற்படுத்தக் காரணமானேன். எனது வார்த்தையே சட்டமென்று டாக்டர் கரேயும் ஸ்ரீ நரிமனும் சொன்ன காலமுமுண்டு. இப்பொழுது அவர்கள் மீது எனக்கு அவ்வித அதிகாரமில்லை. அவ்விருவர் மீது ஒழுங்கு நடவடிக்கைக்கு நான் உடன்பட்டேன். அவர்கள் விஷயத்தில் நான் எனது நெருங்கிய பக்தர்கள் விஷயத்தில் நடப்பது போலவே நடந்தேன். எனது நடவடிக்கைகளுக்கெல்லாம் அன்பே அடிப்படை. இங்கிலீஷ்காரர்கள் விஷயத்திலும் அவ்விதமே நடந்தேன். அவர்களை யெதிர்த்துப் போராடிய போது அவர்கள் என்னைக் கண்டபடி திட்டினர்கள். பிரிட்டிஷ் ஆட்சி பற்றியும் பிரிட்டிஷ் முறைகள் பற்றியும் கண்டித்தால் இங்கிலீஷ்காரர் மீது எனக்கு துவேஷமிருப்பதாக கூறக் கூடாது. இங்கிலீஷ்காரர் மீது துவேஷமுடையவர்கள் முடிவில் என்னுடன் அபிப்பிராய பேதம் கொள்ளக்கூடும்.

நான் புதிய கொள்கைகளை விவரிக்கவில்லை. 1908ம் வருஷம்எழுதிய 'ஹிந்த் சுயராஜ்யம்' என்ற எனது நூலில் இவற்றைக் காணலாம்.

சர்க்கா, அன்பு என்னும் வேலைத் திட்டத்தின் ஒரு பாகமாகிவிட்டது. அஹிம்சா தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கையை நான் கற்பனை செய்தபோது அவ்வாழ்க்கை உயரிய சிந்தனையோடு எளியதாக விருக்கவேண்டுமென்பதைக் கண்டேன். வாழ்க்கைக்கு உணவும் உடையும் அவசியம். இரண்டுமில்லாமல் வாழ்வது அசாத்யம். அஹிம்சா முறையில் தற்காப்பு ஏற்படவேண்டுமானல் சமூகத்திலுள்ளவர்கள் அயல் நாட்டுக் குழப்பத்தின்போதும் தங்கள் அவசியங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளக் கூடியவர்களாக விருக்க வேண்டும். அவ்விதச் சந்தர்ப்பங்களில் சமையல் செய்வதெவ்வளவு சுலபமோ அவ்வளவு சுலபமே தக்ளி அல்லது ராட்டினத்தையும் கைத்தறியையும் வைத்திருப்பது. அஹிம்சா தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட சமுதாயத்தில் ஒத்துழைப்பு அவசியம். பலாத்காரம் மூலம் பலாத்காரத்தை சமாளிக்க எதிர்பார்க்கும் சமூகம் கண்டபடி வாழ்க்கை நடத்தும். அல்லது பெரிய நகரங்களையும் ஆயுதசாலைகளையும் சிருஷ்டிக்கும். ஐரோப்பிய நகரங்களும், பாக்டரிகளும் யுத்த நாவாடங்களும் ஒன்றுக்கொன்று சம்பந்தமுடையன.

அஹிம்சா தர்ம அடிப்படையை உடைய நாகரீகம் இந்தியக் கிராமக் குடியரசே. அந்தக் குடியரசு நிருந்ததாமலிருந்ததென்பதை ஒத்துக்கொள்கிறேன். அதில் எனது அபிப்பிராயப்படி அஹிம்சா தர்மமுமில்லை. ஆனல் அஹிம்சாதர்மத்தின் வித்து இருந்தது.

நாம் பெரிய மாறுதல் ஏற்படும் தருவாயிலிருக்கிறோம். அம்மாறுதலால் பெரிய நன்மையோ அல்லது பெரும் கெடுதியோ ஏற்படலாம். எனது சகாக்களிடம் அவர்களது ஒத்துழைப்பை இழப்பதாகவிருந்தால் கூட என்து அந்தரங்க எண்ணங்களைத் தெரிவிக்கத் தைரியம் எனக்கு வேண்டும்.

### சர்க்காவே சிறந்த ஆயுதம்

அந்த வித்திலிருந்தே நான் அஹிம்சை முறையை அபிவிருத்திச் செய்தேன்.

சர்க்காவே சத்யாக்ரக ஆயுதசாலையில் சிறந்த ஆயுதம். ராட்டினத்திலிருந்து கிளம்பும் மெல்லிய நூலிழை அறுக்க முடியாத ஒரு கயிற்றில் கோடிக் கணக்கானவர்களைப் பிணைக்கக்கூடும். ஒரு கெஜம் நூல் பிரயோஜன மற்றதாக விருக்கலாம். ஆனல், மனப்பூர்வமாக விஷயமறிந்தவர் கையினல் நூற்கப்பட்ட கோடிக்கணக்கான நூல்களால் ஆன ஒரு கயிறு எவ்வித பாரத்தையும் தாங்கக்கூடிய பலமுள்ளதாக விருக்கும்.

1908–1914 இந்த வருஷங்களுக்கிடையில் இந்தயோசனை மழுங்கிக் கிடந்தது. இந்தியாவுக்காகவே முழுத் திட்டம் நிறுவப்பட்டது. ஆனல், அதன் உணர்ச்சி தென் ஆப்ரிக்காவிலும் பரிமளித்தது. அங்கே சத்யாக்ரகிகளின் வாழ்க்கை மிக்க எளியதாக்கப்பட்டது. பாரிஸ்டர்களாக விருந்தாலும்கூட தொழிலின் கௌரவத்தை உணர்ந்தார்கள். சொந்த விருப்பத்தின்பேரில் வறுமையை ஏற்றுக்கொண்டு, ஏழைகளுடன் ஐக்கியப்பட்டார்கள். நான் இந்தியாவுக்கு வந்ததும் சர்க்காவைபுதுப்பிக்கத் தனியாக வேலை செய்ய ஆரம்பித்தேன். 1921ம் வருஷத்தில் கதர், காங்கிரசின் வேலைத்திட்டத்தின் பிரதான அம்சமானது. சர்க்காவும் தேசியக்கொடியில் இடம் கொண்டது.

### எதிர்ப்பவர்களுக்குப் பதில்

சர்க்காவையும் அதன் விசேஷத்தையும் யெதிர்த்து எழுதிவரும் தோழர்களிடம் எனக்கு நன் மதிப்பு உண்டு. அவர்கள் தங்கள் அபிப்பிராயப்படி தேசத்துக்கு வழிகாட்டி ஒரு சேவை புரிந்து வருகிறர்கள். நான் கோரும் யோக்கியதாம்சங்களை அவர்கள் இயந்திரம்போல் ஒத்துக்கொள்ள நான் விரும்பவில்லை. இயந்திரம் போல் ஒத்துக்கொள்வதால் தேசத்திற்கு நன்மையாக இருக்க முடியாது.


## ஹிந்தி அவசியமா?

ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் எழுதியது.

தமிழின் முழுச் சிறப்பை எடுத்துக் காட்டி, ஹிந்தி அவசியமா, இல்லையா அதனல் தமிழ் பாதிக்கப்படுமா என்ற விவாதமும் இப்புத்தகத்தில் துருவி ஆராயப்பட்டிருக்கிறது. அழகான நடை.

எங்களிடம் விற்பனைக்குத் தயாரில் இருக்கின்றன.

விலை அணா 2 தபால் செலவு வேறு.

விபரங்கட்கு: மானேஜர்,
ஊழியன் ஆபீஸ்,
காரைக்குடி.

# விமானங்களைப்பற்றிய முழு விபரம்

★

யுத்த விமானங்களில் பற்பல வித மானவையுண்டு. அவைகள் உபயோகப்படும் விதங்களாவன:—

(1) எதிரியின் பிரதேசத்தின் மீது பறந்து போட்டோக்கள் பிடித்து சர்வே செய்வது.

(2) எதிரியின் யுத்தக் கப்பல்கள் மீது ஆகாயத்திலிருந்து குண்டுகளைப் பொழிந்து தாக்குவது.

(3) எதிரியின் நீர்மூழ்கிக் கப்பல்கள் இருக்குமிடத்தை ஒருவகை ஒளியின் மூலம் அறிவது.

(4) பகைவரின் வெடிமருந்துத் தொழிற்சாலைகள், இராணுவத்தலைமை ஸ்தலம், யுத்தக்கப்பல் மூலஸ்தலம் ரயில்பாதை, தந்திக்கம்பி, பாலங்கள் முதலியவற்றின்மீது குண்டுகளைப் பொழிந்து தகர்ப்பது.

(5) எதிரிகளின் படைகள் மீது குண்டுகளைப்பொழிந்து துவம்சம் செய்வது.

இவை போன்ற இராணுவக் காரியங்களுக்கு விமானங்களை உபயோகிப்பது யுத்த தருமத்திற்கு இசைந்ததுதான் என்று சர்வதேச சங்க யுத்தச் சட்டம் ஒப்புக்கொண்டிருக்கிறது. ஆனால் இராட்சஸத்தனமாக மற்றும் சில கொடிய காரியங்களுக்கும் சில அரசாங்கங்கள் யுத்த விமானங்களை உபயோகித்துவிடுகின்றன. நிரபராதியான பொது ஜனங்கள் மீது விமானங்கள் வெடிகுண்டுகளை வீசி அவர்களைத் திகில் அடையச் செய்யும் முறையை அவைகள் கைக்கொள்ளுகின்றன. போலந்தில் ஹிட்லர் கையாண்ட முறை இதுதான்

சென்ற மகா யுத்தத்தில் இருந்ததைவிட மகா பயங்கரமான சண்டை விமானங்களை இப்போது எல்லா நாடுகளும் தயாரித்து வைத்திருக்கின்றன; இன்னும்தயாரித்துக்கொண்டுவருகின்றன. யுத்த விமானங்களில் இரண்டு வகையுண்டு (1) பாம்பர் என்று கூறப்படும் வெடிகுண்டுகளைவீசும் விமானம். (2) பைட்டர் என்று சொல்லப்படும் சண்டை விமானம். எதிரியின் விமானத்தைத் தாக்கிப் போரிட்டுத் துரத்துவதற்காகக் கட்டுப்படுவதுதான் சண்டை விமானம்.

சில விமானங்கள் சண்டையிடுவதற்கும் குண்டு பொழிவதற்கும் ஏற்ற விதத்தில் கட்டப்படுவதுமுண்டு.

வெடிகுண்டு விமானங்களில் பலம் பொருந்திய குண்டுகள் இருக்கும். அவற்றைச்சுட எவ்வித பீரங்கியும் தேவையில்லை. சும்மா அப்படியே உயரேயிருந்து போட்டுவிட்டால் அக்குண்டு வெடித்துவிடும். எதிரி விமானங்களுடன் போராடுவதற்காக எல்லா யுத்த விமானங்களிலுமே பற்பல இயந்திரப் பீரங்கிகளும், சிறு சிறு பீரங்கிகளும் வைக்கப்பட்டிருக்கின்றன.

சில கடல் விமானங்களில் டார்ப்பிடோ வெடிகூட வைக்கப்பட்டிருக்கின்றது. இக்கடல் விமானங்கள் ஜலமட்டத்துக்குச் சமீபமாகப் பறந்து டார்ப்பிடோவைப் போட்டுவிட்டுப் போகும். அந்த டார்ப்பிடோ தண்ணீருக்குள் குறிப்பிட்ட ஆழத்தில் அமிழ்ந்து ஓடி எதிரிகப்பல் அல்லது நீர்மூழ்கியைத் தாக்கும்.

இன்னோர் ஆச்சரிய இராணுவ விமானத்தையும், பிரிட்டிஷார் செய்திருப்பதாக 'நியூ எஜுகேட்டர்' அகராதி சொல்லுகிறது. இந்த விமானத்தை விமானியில்லாமலேயே ரேடியோ மூலமாகவே இயக்கமுடியும். ஆனால் ஆளில்லாமலே ஆகாயத்தில் பறக்கக்கூடிய இந்த அதிசய விமானம் யுத்தத்தில் பெரிதும் உபயோகப்படுமா? உபயோகிக்கிறார்களா? என்பது பின்னால்தான் தெரியும். இது இன்னும் பரீக்ஷார்த்த நிலைமையில் தான் இருக்கிறது.

வெடிகுண்டு விமானங்களுக்குள்ளும் இரண்டு வகைகள் இருக்கின்றன. அவையாவன, (1) பகலில் வெடிகுண்டுகளை வீசுபவை. (2) இரவில் வெடிகுண்டுகளை வீசுபவை. பகல் விமானங்கள் தங்கள் இருப்பிடத்திலிருந்து 50 முதல் 100 மைல் தூரம் சென்று 12,000 அடிமுதல் 20,000 அடி உயரம்வரை பறந்து குண்டுகளை வீசும். இரவு விமானங்களோ, 200 மைலும் அதற்குமேலும் சென்று 8000 அடிமுதல் 12,000 அடி உயரம் வரை பறந்து குண்டுவீசும்.

இந்தக் குண்டு விமானங்களை எதிர்க்க வழிகிடையாதா? அதற்குச் சில வழிகள் கையாளப்படுகின்றன. விமானங்களைச் சுடக்கூடிய பீரங்கிகளைக்கொண்டு இவற்றைச் சுடுகிறார்கள். சண்டைவிமானங்கள் வந்து இந்த விமானங்களுடன் போரிடுகின்றன. முக்கிய நகரங்களில் வலைபோல் பல கம்பிகளில் புகைக்கூண்டுகளைக்கட்டி 12,000 அடி உயரத்தில் அந்தப் புகைக் கூண்டுகளைப் பறக்க விடுகின்றனர், அந்தக் கம்பிகள் கண்ணுக்குத் தெரியமாட்டாவாகையால், எதிரியின் குண்டு விமானங்கள் அவற்றில் சிக்கிக் கீழே விழுந்து நாசமாகிவிடும். இந்த மூன்று முறைகளுக்குள்ளும் எதிரியின் குண்டு விமானங்களை நமது சண்டை விமானங்களைக்கொண்டு தாக்கி விரட்டுவது தான் மிகச் சிறந்த முறையாகும்.

முற்காலத்திலென்றால் எதிரியின் விமானங்கள் தனித்தனியாய் வரும். அவற்றை நமது விமானங்களும் தனித்தனியாகவே எதிர்க்கும். ஒண்டிக்கொண்டி விமானச்சண்டை ஆகாயத்திலே பலமாய் நடக்கும். இறுதியில் ஏதாவது ஒரு விமானம் நிலைகுலைந்துசாயும். இக்காலத்திலோ இந்த நிலைமை அடியோடு மாறிவிட்டது. குறைந்தது மூன்று எதிரி விமானங்கள் அணிவகுத்துத்தான்வரும். இந்த மூன்றில் ஒன்றை நமது விமானம் தாக்கினால் நமது விமானத்தின் வாலிலே மற்றோர் எதிரிவிமானம் வந்து தாக்கும். பின் அதன் வாலில் நம்முடைய விமானம் ஒன்று தாக்கும். இப்படியாக எதிரிவிமானங்களும், நமது விமானங்களும் ஒன்றன் வாலை ஒன்று தாக்கி வதை செய்யும். சிலசமயம் ஒரு கட்சியின் விமானங்கள் மறுகட்சியின் விமானங்களைவிடக் குறைவாயிருக்கும். அப்போது குறைந்த விமானங்கள் உள்ள கக்ஷியார், ஒன்றுக்குப் பின் ஒன்றாய்த் தங்கள் விமானங்களில் வட்ட வளையமாய்ச் சுற்றிச் சுற்றிப் பறந்துகொண்டிருப்பார்கள். மறுகக்ஷி விமானங்கள் இந்த வட்டவளையமான வியூகத்தைத் தாக்குவது கஷ்டமாகும். ஏனெனில் இந்த வட்டத்தில் உள்ள ஒரு விமானத்தைத் தாக்கினால் பின்னாலேயே வரும் மற்றோர் விமானத்திடம் அகப்பட்டுக்கொள்ள நேரிடும். இந்த விமானச் சண்டைகள் கண்கொண்டு பார்க்க முடியாத அவ்வளவு குரூரமாயிருக்கும். அதைப் பச்சைப் படுகொலை என்றுதான் கூறவேண்டும்.

# அப்படியானால் 10 நிமிஷம்கூட நிலைக்காது

## பிரிட்டிஷ் சாம்ராஜ்யம்பற்றி பர்னார்ட் ஷா

★

பிரிட்டனுடைய யுத்த நோக்கத்தைப்பற்றி பர்னார்ட் ஷா கிண்டலாக ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதைப் படித்தபின் சாதாரண ஆங்கிலேயர் ஒவ்வொருவர்க்கும் ஆத்திரம் மூண்டது. பலவிதமான கண்டனக் கட்டுரைகள் பல ஆங்கிலப் பத்திரிகைகளிலே வெளிவந்தன. பர்னார்ட் ஷா அளிக்கும் அமைதி நிறைந்த பதில் இது:—

நம் நாட்டுப்புற ஏகாதிபத்தியக்காரர்களுக்கு உதாரணமாக இவர்களைத் தேர்ந்தெடுப்பது ஒருவகையில் கொடுமையானதென்று நான் நினைக்கிறேன். இவர்கள் அனைவருமே அவ்வளவு கெட்டவர்களல்லர். ஆனால் புத்திசாலிகள் ஏதாவது சொல்ல வேண்டிய விஷயமிருந்தாலொழிய, பத்திரிகைகளுக்கு எழுதமாட்டார்கள். எப்படியிருந்தாலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இந்த மாதிரியான ஒரு விஷயத்தைப் பொறுத்து உயிர்வாழ்வதாயிருந்தால், அது இன்னும் 10 நிமிஷ நேரங்கூட நிலைப்பது துர்லபம்.

உண்மைகள் நம் நாட்டுப்புறங்களைக் கவனிக்கமாட்டா. அவை தெளிவாக இருக்கின்றன. ஹர் ஹிட்லருடைய திட்டம் வேர்சேல்ஸ் ஒப்பந்தத்தைக் கிழித்தெறிவதாகும். அதுவும் அந்த ஒப்பந்தத்திலுள்ள மிக மோசமான போலிஷ் காரிடோரையும் ஜர்மென் வாடையற்றிருந்த டான்சிக்கையும் பற்றின் பக்கத்தைக் கிழித்தெறிவது தான். ஹிட்லருடைய எண்ணம் ஐரோப்பாவின் ஏனைய பகுதிகளையும் பிடிப்பதுதான் என்று கூறுவதற்கு இதுவே போதிய ஆதாரம் ஆக முடியாது.

செக்கோஸ்லோவேகியாவில் ஒப்பந்தத்தை மீறியதுபோல், போலந்திலும் மீறினால் ஹர் ஹிட்லரை ஒழிப்போமென்று நாம் பயமுறுத்தினோம். நம் வீண் ஜம்பத்தை சந்தியில் இழுத்துவைத்து அவர் எளிதில் ஜயமடைந்துவிட்டார். போலந்துக்கு உதவியாக நாம் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால் இதன் மூலம் நம் ஏகாதிபத்தியக்காரர்கள் 1918ல் ஏற்பட்ட சமாதானத்தைக் குலைத்து, ஜர்மென் சர்க்காரைப் பலஹீனப்படுத்தி, வேர்சேல்ஸ் ஒப்பந்தத்தை மீண்டும் நிலைநிறுத்த ஒரு சந்தர்ப்பம் தேடிக்கொண்டு விட்டார்கள்.

போலந்தை ஜர்மெனி பிடித்துக் கொள்கிற விஷயம், ருஷ்யாவைத் தலையிடுமாறுச் செய்தது. இதை ருஷ்யா மிகச் சாமர்த்தியத்துடனும் செய்தது. அதாவது அதனுடைய பழைய போலந்தின் பாதியை ஆக்ரமித்துக் கொண்டது.

இப்படி மிக அபாயமான மூலையில் அகப்பட்டுக்கொண்ட ஹர் ஹிட்லர் மிகமிகச் சிறந்த புத்திசாலித் தனத்துடன் நடந்துகொண்டார். அதாவது வேர்சேல்ஸ் போலந்தை நிலைநிறுத்த நாம் மேலும் யுத்தம் புரிவதாயிருந்தால், நாம் ஜர்மெனி ருஷ்யா ஆகிய இரு தேசங்களுடன் யுத்தம் புரிந்தாகவேண்டிய நிலைமையை ஏற்படுத்திவிட்டார். ஆனால் இப்படிச் செய்வது —மிகப் பொறுமையுடன் சொல்லவேண்டுமானால்— புத்தி சுவாதீனமான காரியமாகாது. இதைத் தவிர்த்துவிட்டு, ஜினிவாவுக்குச் சென்று கிறிஸ்துவர்களைப் போல நாம் சமாசம் காணவேண்டும். ஹர் ஹிட்லர் இதற்கு இணங்கத் தயாராயிருக்கிறார். காம்ரேட் ஸ்டாலின் (பிரெஞ்சுப் பத்திரிகைகள் இப்போது மான்ஷியர் ஸ்டாலின் என்று வழங்குகின்றன) தயாராயிருக்கிறார். சினோர் முசோலினியும் ஜெனரல் பிராங்கோவும் இதை ஆதரிக்க மிகப் பரபரப்புடன் இருக்கிறார்கள். ருஷ்யாவை எதிர்ப்பதாயிருந்தாலன்றி, துருக்கி மற்ற எல்லா விஷயங்களிலும் நம் பக்கமிருக்கும். பல லட்சக் கணக்கான நாட்டுப்புற வாசிகளின் ஆதரவுடன் விளங்கும் ஸ்ரீ லாயிட் ஜியார்ஜும் இந்த எண்ணத்துடன் அவசரப்பட்டுக்கொண்டிருக்கிறார். இதே போலத்தான் பர்னாட் ஷா என்கிற நானும், அறிவாளி என்ற விஷயத்தில் நான் மிக அருவருக்கப்பட்டபோதிலும் ஏகதேசத்தில் இம்மாதிரியான, விஷயங்களில் நான் சொல்லுவது சரியாகவேயிருக்கும்.


## ஜோதி சித்தவைத்திய ஆஸ்ரமம்

### நாகதாதபுரம், காரைக்குடி.

(Govt: Regd No. 6680)

செட்டிமார் நாட்டில் சுமார் 4 வருஷ காலமாய் காச, க்ஷய (T B., Asthma) ரோகங்களுக்குச் சிகிச்சை செய்து, நகரத்தார்களிடமும், டாக்டர்களிடமும், ஆபீசர்களிடமும் நற்சாட்சிப்பத்திரம் பெற்றிருக்கிறேன்.

O. ராமசாமி அய்யர்.

(நற்சாட்சிப் பத்திரம் நகல்)

பல வருஷங்களாக க்ஷயத்தால் பிடிக்கப்பட்டுப் பலஹீனமடைந்திருந்த எனது 15 வயதுப் பையனுக்கு ஷை டாக்டரின் 24 நாள் மருந்தில் பூரண குணம் ஏற்பட்டு, எடை கூடிவந்து திடமாக இருக்கிறான். பொதுஜனங்கள் ஷையாரிடம் சிகிச்சைபெற்று குணம் அடைவார்கள் என்று திடமாகச் சொல்லுகிறேன்.

கட்ரம்பாளையம், 7—1—1936. } டாக்டர் வெங்கட்ரமண அய்யர்.

ஒ. ராமசாமி அய்யர் ஆஸ்மா டேபர்குளோஸ் வியாதிகளுக்கு எனக்குத் தெரிந்த இடங்களில் மருந்துகொடுத்து இரண்டு மூன்று பேர்களுக்குப் பூரணக் குணமாகி நல்ல நிலைமையில் இருக்கிறார்கள். ஷை வியாதிகளுக்கு ஷையாரிடம் மருந்து சாப்பிடுவதற்கு யாதொரு ஆட்சேபணையும் இல்லை. ஷை மருந்தால் குணமடைவார்கள் என்பதற்குத் தைரியம் சொல்லலாம்.

காரைக்குடி, 31—5—1939 } அ. ராம. சோம. சிதம்பரம் செட்டியார்.




தேர்தல் அதிகாரி ஸ்ரீ. க. மீனாட்சி சுந்தரம் அறிவிக்கிறார்:

கீழ்க்கண்டவர்கள் ராம்கார் காங்கிரசுக்குப் பிரதிநிதிகளாய்ப் போட்டியில்லாமல் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

சாத்தூர் தாலுகா: ஷெண்பகமூர்த்தி எஸ். ராமசாமிநாயுடு எம். ஏ. பி. எல். ஜில்லாபோர்டு மெம்பர்.

விருதுநகர் ஸ்தானம் 1க்கு சுப்ரமண்ய நாடார், தனுஷ்கோடி நாடார் ஆகிய இருவரும் போட்டியிடுகின்றனர். தேர்தல் தேதி 20—1—40.

முதுகுளத்தூர் தாலுகா: உ. முத்துராமலிங்கத் தேவர் எம். எல். ஏ., டி. எல். சசிவர்ணத் தேவர்.

இராமநாதபுரம் தாலுகா: ஜி. கோவிந்தன்.

காரைக்குடி ஜில்லா-தொண்டி-திருவாடானை சர்க்கிள் ஸ்தானம் 1. தேர்தல் தேதி 18—1—40.

பிரதமசபை நிர்வாகஸ்தர்கள்

சாத்தூர் தாலூகா

தலைவர்: சொ. ச. சங்கம ரெட்டியார்
உபதலைவர்: ஏ. டி. ராமசாமி நாயக்கர்
காரியதரிசி: எஸ். ராமசாமி நாயுடு
உபகாரியதரிசி: பி. எஸ். சங்கரப்ப நாயுடு
பொக்கிஷதார்: எஸ். ஜெயராம் ரெட்டியார்

அங்கத்தினர்கள்

ஆர். வி. செல்லம்மாள், ஏ. கிருஷ்ணசாமி நாயுடு. ப. சக்கரை நாடார், கொ. ச. நா. சங்கமநாயக்கர், வை. ராமசாமி நாயக்கர், ச. வைத்திலிங்கம், மா. பெ. குருசாமி நாயக்கர், டி. கே. ஐ. வெங்கிடாசலசாமி மணியகாரர், எஸ். வி. வீரப்ப நாயுடு, கொ. வீ. அ. வீரப்ப செட்டியார்.

ஜில்லாக் கமிட்டிக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள்.

கே. காமராஜ் நாடார், என். சீனிவாச நாயக்கர், எஸ். ராமசாமி நாயுடு எம். ஏ. பி. எல்.,

பரமக்குடி தாலுகா

தலைவர்: கோ. கோவிந்தன்
உபதலைவர்: கே. எம். நாகூர்கண்ணி சாஹிப்
காரியதரிசி எஸ். ராமசாமி
உபகாரியதரிசி: எஸ். சிங்கத்துரை தேவர்
பொக்கிஷதார்: என். வீராச்சாமி ஆச்சாரி

அங்கத்தினர்கள்

டி. சீனிவாசய்யங்கார், அ. ப. வெங்கிடாசலம் பிள்ளை, ரெ. நவநீத கிருஷ்ணன் பிள்ளை, க. நீலமேகம், செ. லெக்ஷ்மணன் செட்டியார், து. கா. துரைச்சாமி நாயக்கர், மே. அ. சொக்கலிங்க நாயக்கர், டி. கே. மல்ராஜ் பிள்ளை, ஆ. பொன்னையா நாயக்கர், ரெங்கய்யர்.

இராமநாதபுரம், காரைக்குடி ஜில்லாக்கள்

# காங்கிரஸ் தேர்தல் விபரம்

ஜில்லாக் கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள்.

கோ. கோவிந்தன், கே. எம். நாகூர் கண்ணி சாஹிப், து. கா. ரா. துரைச்சாமி நாயக்கர்.

அருப்புக்கோட்டை நகரம்

தலைவர்: இ. கா. பு. மு. காமாக்ஷி செட்டியார்
உபதலைவர்: சே. அ. அழகர்சாமி நாயக்கர்
காரியதரிசி: சா கி. அ. ராமகிருஷ்ணன்
உபகாரியதரிசி: கொ. கிருஷ்ணசாமி நாயக்கர்
பொக்கிஷதார்: ஆர். வெங்கிட்டராம அய்யர்

அங்கத்தினர்கள்

க. மீ. மீனாக்ஷிசுந்தரம் செட்டியார், வெ. எதிராஜ் நாயக்கர், த. சொ. க. சுப்பையா, க. ச. நா. ச. சவுண்டு செட்டியார், மு. உ. மல்லையா செட்டியார், ஆ. மல்லையா செட்டியார், வு. சொ. சோமசுந்தரம், த. அ. வீ. ராமசாமி நாயக்கர், ப. தி. ராமசாமி நாயக்கர், செ. வீ. வீரபத்திரன் செட்டியார்.

ஜில்லாக் கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள்.

சா. கி. அ. ராமகிருஷ்ணன், ப. தி. ராமசாமி நாயக்கர்.

அருப்புக்கோட்டை தாலுகா

தலைவர்: வை. ராமசாமியா பிள்ளை
உபதலைவர்: கோ.வி மாரி ரெட்டியார்
காரியதரிசி: அ. வெ. திருப்பதி
உபகாரியதரிசி: ப. ம. பூமிநாதன்
பொக்கிஷதார்: பி. எஸ். ராமசாமி நாயுடு

அங்கத்தினர்கள்

அ. சுந்தரம், எம். கோவிந்தசாமி பிள்ளை, ஆ. முத்துக்குமாருசாமிபிள்ளை, கெ. கி. ரெ. ராமசாமி ரெட்டியார், பெ. ச. பெ. அகிதீர்த்த நாடார், சு. ஒ. கிருஷ்ணசாமி ரெட்டியார், மு. வா. மு. வாலகுருவா ரெட்டியார், ஞா. ஆ. சாமுவேல், ஆர். வெங்கிட்டராமய்யர், வி. சுப்புராமன்.

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

அ. வெ. திருப்பதி திருவேங்கிட ரெட்டியார், ஞா. ஆ. சாமுவேல், எஸ். எஸ். பாலகிருஷ்ண ரெட்டியார்.

சிவகாசி நகரக் காங்கிரஸ் கமிட்டி

தலைவர்: செ. பெ. ச. கெ. ஆறுமுக நாடார்
உபதலைவர்: க. அ. மா. அ. கா. நடராஜன்
காரியதரிசி: அ. ச. க. க. தியாகராஜன்
உபகாரியதரிசி: வ. வீ. செ. சுப்பையா நாடார்
பொக்கிஷதார்: பா. செ. ரா. செண்பகமூர்த்தி

அங்கத்தினர்கள்

சி. ஆறுமுகசாமி, பூ. பெ. சி. தர்மராஜ் நாடார், வெ. ஆ. வை. பால்ராஜ், ஏ. லெக்ஷ்மணன், கெ. பெ. ஆ. மு. வேலாயுத நாடார், ஏ. பி. ஆர். எஸ். ஏ. நடராஜ நாடார், கே. சங்கரலிங்க நாடார், எம். கே. வி. அரியமுத்த ஆச்சாரி, செ. அ. செந்தியப்பநாடார், ஜே. தர்மராஜ்.

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

திரு அ. ச. க. க. தியாகராஜன்
திரு எஸ். ஜெயராம் ரெட்டியார்

விருதுநகர் நகரக் கமிட்டி

தலைவர்: ரெ. தெ. பெ. சுப்ரமண்ய நாடார்
உபதலைவர் சா நா. பெருமாள் நாயக்கர்
காரியதரிசி: பி. துரைச்சாமி பாக்கிய நாதன்
உபகாரியதரிசி: ஜி வள்ளிநாயகம்
பொக்கிஷதார்: க. சி. சண்முக நாடார்

அங்கத்தினர்கள்

எஸ். ராஜு, எம். பெருமாள் நாடார், பி. எஸ். சின்னச்சாமி, உ. ந. சிதம்பரம், ரா. குருசாமி, பீ. நா. மித்தீன் பிள்ளை, சு. வீரப்பன், ம. மருதன், பெ. ஆதிநாராயணன், சி. உலகநாதன்.

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

ரெ. தெ. பெ. சுப்ரமண்ய நாடார்
சு. சி. சண்முக நாடார்

ராஜபாளையம் நகரம்.

தலைவர்: ஏ. கே. டி. பலராமராஜா
உபதலைவர்: ஏ. கிருஷ்ணன்
காரியதரிசி: பே. நா. சுப்பா ராஜா
உபகாரியதரிசி: சொ. க. அய்யனார் நாடார்
பொக்கிஷதார்: பி. காளிமுத்து செட்டியார்.

அங்கத்தினர்கள்

பி. எல். துரைச்சாமி ராஜா, வி. கோவிந்தன், ஏ. பி. ராமசாமி ராஜா, கொ. வெ. தேசிங்கு ராஜா, க. மு. அய்யனார், எ. ல. சிங்க ராஜா, ஆர். எம். ராமசாமி, இ. ப. அரங்கசாமி ராஜா, அக்னி ஆசாரி, எ. கு. பெருமாள் ராஜா.

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

பி. என். குமாரசாமி ராஜா, எம். எல். ஏ., எ. கு. பெருமாள் ராஜா.

ஸ்ரீவில்லிபுத்தூர் நகரம்

தலைவர்: டாக்டர் வி. நாராயண அய்யர்
உபதலைவர்: பி. ஆர். அருணாசலநாடார்
காரியதரிசி: ஏ. பி. ராமசாமி நாயுடு
உபகாரியதரிசி: டி. சுந்தரராஜன்
பொக்கிஷதார்: டி. வடமலையப்பன்.

அங்கத்தினர்கள்

மு. சுப்பையாத் தேவர், எஸ். விநாயகமூர்த்தி, சி. வி. நடராஜன், ஏ. கே. சுப்பா ராஜா, எஸ். சோமசுந்தரம், ஜி. முத்துஸ்வாமி, ப. சுப்பையா நாயுடு, கே. கிருஷ்ணசாமி அய்யங்கார், கி. கா. காதர்மொய்தீன், பெ. ராமையா நாடார்.

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

டி. வடமலையப்பப் பிள்ளை
மா. கோவிந்தன்.

ஸ்ரீவில்லிபுத்தூர் தாலுகாக் கமிட்டி

தலைவர்: என். அழகிரிசாமி
உபதலைவர்: எஸ். பிள்ளையார்சாமித் தேவர்
காரியதரிசி: எஸ். ஆறுமுகவேல் நாடார்
உபகாரியதரிசி: என். ஆர். கோபால்சாமி
பொக்கிஷதார்: வி. எம். வி. சுப்பையா நாடார்.

அங்கத்தினர்கள்

வே. குப்பண்ணாராவ், கே. சண்முகசுந்தரம், ப. முத்தையகோன், வீரபத்திரத் தேவர், வி. இருளாண்டியா பிள்ளை, கே. சோமசுந்தரம், மு. ராமசாமி நாயுடு, பி. கந்தசாமி பிள்ளை, தி. சீனிவாசன், ப. அ. மு. குருசாமி மூப்பனார்.

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

என். ஆறுமுகவேல் நாடார்
ஜி. அழகிரிசாமி நாயுடு
ரா. கிருஷ்ணசாமி நாயுடு.

முதுகுளத்தூர் தாலுகா

தலைவர்: வி. சி. முருகையா பிள்ளை
உபதலைவர்: எஸ். ஆர். எம். சங்கரலிங்கம் பிள்ளை
காரியதரிசி: எம். சுப்பையா பிள்ளை
உபகாரியதரிசி எஸ். பி. சீனிவாசய்யங்கார்
பொக்கிஷதார்: வி. எம். எஸ். வேல்சாமி நாடார்

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

வி. எம். எஸ். வேல்சாமி நாடார், சங்கரலிங்கம் பிள்ளை, எஸ். பி. சீனிவாசய்யங்கார்.

சிவகெங்கை நகரக் காங்கிரஸ் கமிட்டி நிர்வாகஸ்தர்கள்

தலைவர்: ஆர். ராமானுஜம்
உபதலைவர்: இ. ஷேக்தாவூத்
காரியதரிசி: கா. வெ. சேதுராமச்சந்திரன்
பொக்கிஷதார்: எஸ். சூர்யநாராயண சர்மா

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

ஆர். ராமானுஜம், கா. வெ. சேதுராமச் சந்திரன்.

திருப்பத்தூர் நகரக் காங்கிரஸ் கமிட்டி நிர்வாகஸ்தர்

தலைவர்: கே. கிட்டு அப்பர்,
உபதலைவர்: ஏ. லிங்கசாமி நாயுடு
காரியதரிசி: பழ. முத்துக்கருப்பன் அம்பலம்
உபகாரியதரிசி: க. சுப்பையா
பொக்கிஷதார்: மு. சந்திரசேகரம்

ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள்

பக்கிரிமுகம்மது, வ. ராமநாதன்.

## பஞ்சாங்கம்

நற்றோ லாசோ — 1940 ஜனவரி-ீ — பிரமாதி-ஸ்ரீ தை-ீ

| பர்மா. | இங் | தமிழ். | வாரம். | பிரமாதி-ஸ்ரீ இங்-1940. பர்மா-1302. |
|---|---|---|---|---|
| 9 | 18 | 5 | வியா | அஷ்-7-14. அஸ்-23-23. அ. சித்த யோகம். |
| 10 | 19 | 6 | வெள் | நவ-9-35. பர-26-43. சித்தயோகம். |
| 11 | 20 | 7 | சனி | தச-10-40. கார்-28-49. அமிர்தயோகம். |
| 12 | 21 | 8 | ஞாயி | ஏகா-10-28. ரோ-29-40. சித்த யோகம். |
| 13 | 22 | 9 | திங் | துவா-9-1. மிரு-29-21. அமிர்தயோகம். |
| 14 | 23 | 10 | செவ் | திர6-27. திரு-27-59. மரண யோகம். |
| 15 | 24 | 11 | புதன் | ○ பௌ-58-24. புன-25-42. சித்தயோகம். |
| 1 | 25 | 12 | வியா | பிர-53-19. பூச-22-40. அ. சித்தயோகம். |

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | ரெங்கூன் | பினாங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய மார்கழி | 29 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| தை | 29 | 0 6 0 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| மாசி | 30 | 0 6 6 | 0 4 6 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| பங்குனி | 31 | 0 6 6 | 0 4 9 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| பிரமாதிசித்திரை | 31 | 0 6 9 | 0 4 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| வைகாசி | 31 | 0 6 6 | 0 5 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| ஆனி | 32 | 0 6 6 | 0 5 6 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| ஆடி | 31 | 0 6 0 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| ஆவணி | 31 | 0 5 6 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| புரட்டாசி | 31 | 0 5 6 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| அற்பசி | 29 | 0 5 6 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| கார்திகை | 30 | 0 5 6 | 0 4 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| மார்கழி | 29 | 0 5 9 | 0 4 6 | 0 4 6 | | |

REG NO. M. 3888 | 12 PAGES | PRICE 1 ANNA

**SUBSCRIPTIONS**

| | | |
|---|---|---|
| Inland Annual | ... | Rs. 5 |
| Burma Annual | ... | Rs. 6 |
| Foreign Annual | ... | Rs. 7 |

# ஊழியன்

**ADVERTISEMENTS**

| | | |
|---|---|---|
| One Inch S. C. per insertion | As. | 8 |
| Court Notice per Inch | Re. | 1 |

Long Standing Advertisements given Concessions

## The "Oolian", A Nationalist Tamil Weekly

VOL. 19 | KARAIKUDI, 18TH JANUARY 1940, THURSDAY | NO. 29

### மிதிலைப்பட்டி கும்பாபிஷேகம்

மிதிலைப்பட்டி ஸ்ரீ சிவயோகவல்லி அம்பாள்சமேத ஸ்ரீஆவுடைநாதசுவாமி மகா கும்பாபிஷேகம் பிரமாதி வருடம் தை மாதம் 16வ (29—1—40) திங்கட்கிழமை காலை 9க்கு மேல் 10—30க்குள் நடைபெறும்.

மிதிலைப்பட்டிக்கு நமன சமுத்திரம் அல்லது திருமயம் இரயில்வேஸ்டேஷனிலிருந்து சர்விஸ் கார் மார்க்கமாய் வரலாம். நமன சமுத்திரத்திலிருந்து 12 மைல்; திருமயத்திலிருந்து 15 மைல்.

### அரண்மனை சிறுவயல்

#### மரகத விநாயகர் வாசகசாலை

அரண்மனை சிறுவயல் மரகத விநாயகர் வாசகசாலையின் மூன்றாந் திங்கட் கூட்டம் திரு சித. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார் தலைமையிற் கூடியது.

அவ்வமயம் திருவாளர்கள் கண. நடராஜஞ் செட்டியார், செல்லச்சாமித் தேவர், தமிழாசிரியர் கோ. சுப்பிரமண்ய பிள்ளை, சுவாமிராசு, வைரப்பா, ஆறு. சுப்பிரமண்யன் செல்விகள், லெ. வள்ளியம்மை, கரு. தெய்வானை, சித. வள்ளியம்மை, உ. ராம. தெய்வானை, சுப. மங்கயர்க்கரசி முதலியோர் பேசினார்கள்.

### எஸ் சொக்கநாதபுரம்

4-1-40 மாலை எஸ். வேலூரில் எஸ். சொக்கநாதபுரம் சர்க்கிள் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் கூட்டம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. துருக்கி தேசத்தில் ஏற்பட்ட உயிர்ச்சேதம், பொருட்சேதங்களுக்கு அனுதாபப்படுவதாகவும் கூடிய சிக்கிரம் எழுத்தறிவு இயக்கத்தையும் நூல் நூற்றலையும் ஆரம்பிக்கவேணுமென்று அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்வதாகவும் தீர்மானம் நிறைவேறியது.

### பாதுகாப்பாளரும் இருக்கமாட்டார்

#### சர்க்காரின் புதிய முறை

கீழ்க்கண்ட அறிக்கையை சர்க்கார் வெளியிட்டிருக்கிறது.

ஓட்டுகளைக் கலர்ப் பெட்டிகளில் போடும் முறை அமுலுக்குக் கொண்டு வரப்பட்டால் ஓட்டர் ஓட்டுச் சீட்டை வெளியில் கொண்டுபோய் விற்பனை செய்யாமல் தடை செய்வதற்கு போலிங் அறைக்குள் ஒரு ஆசாமி இருக்கவேண்டிய தவசியமென தொகுதி நிர்ணயக் கமிட்டி சிபார்சு செய்தது. இதன் காரணமாக சென்ற தேர்தலில் சர்க்கார் போலிங் அறைகளுக்கு கவனிப்பாளர்களை (வாட்சர்களை) நியமித்தார்கள். இதுபற்றியும் இரண்டு கண்டனங்கள் வெளியிடப்பட்டன. ஓட்டுச் சீட்டை ஒரு குறிப்பிட்ட பெட்டியில் போடும்படி வாட்சர் கூறலாமென்றும் ஒட்டரை போலிங் அதிகாரி அடையாளம் கேட்பதை வாட்சர் ஒட்டுக் கேட்க முடியுமென்றும் குறை கூறப்படுகிறது. ஆகையால் இந்த வாட்சர்களை நீங்கி விடுவதென சர்க்கார் இப்பொழுது முடிவு செய்திருக்கிறார்கள். வாட்சர்களுக்குப் பதிலாக கீழ்க்கண்ட முறை தேர்தலில் அனுஷ்டிக்கப்படும்.

போலிங் பூத்கில் பெட்டிகள் ஒரு திரை மறைவில் வைக்கப்படும். போலிங் பூத்திலிருக்கும் எவரும் பெட்டியையோ ஓட்டரையோ பார்க்கமுடியாத வகையில் திரைபோடப் பட்டிருக்கும். இதனால் ஓட்டுச்செய்வது ரகசியமா யிருப்பதன்றி ஓட்டர் ஓட்டுச் சீட்டை எடுத்துச் சென்றால் அதைக் கவனிப்பதும் போலிங் ஆபீஸருக்கு சாத்யமாகும். ஓட்டர் வேறெந்தத் தூண்டுதலுக்கும் ஆளாகாதிருப்பதும் இதனால் சாத்யமாகும்.

### இப்பி பக்கிரிபற்றி சர்க்கார் கவலை

#### உளவு சொல்லுவோர்க்குச் சன்மானமாம்

இப்பி பக்கிரியையும் அவரது சீடர்களான மற்றிருவரையும் கைது செய்ய உளவு கூறுவோர்க்கு கவர்ன்மெண்டார் முறையே மூவாயிரமும் இரண்டாயிரமும் உதவுவதாக அறிக்கை வெளியிட்டிருக்கின்றது. இப்பி பக்கிரி கோஷ்டியினர் தங்கள் சீல்வைத்து ரஸ்தா சர்டிபிகேட் தயாரித்திருக்கிறார்கள். ஐந்து ரூபாய் கொடுத்து அந்த சர்டிபிகேட்டுகளை வாங்குவோர் ஒரு மாதம் கொள்ளைக்காரர் பயமின்றி நடமாடலாம் எனச் சொல்லப்படுகிறது.

### ரிசர்வ் பாங்கி மத்திய போர்டு

ரிசர்வ் பாங்கி மத்திய போர்டின் கூட்டம் ஜனவரி 22-ந் தேதி பம்பாயில் நடக்கும்.

### சுயேச்சைத் தினம்

#### பம்பாயில் ஏற்பாடுகள்

இவ்வருஷம் சுயேச்சை தினத்தை விசேஷமாகக் கொண்டாட அதிக ஏற்பாடுகள் நடந்துவருகின்றன. பிற்காலத்தில் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தால் அதற்கான படை திரட்ட இந்த தினத்தை காங்கிரஸ் நிருவாகிகள் ஒரு சாதனமாக உபயோகித்துக் கொள்ள விரும்புகிறார்கள். ஒவ்வொரு வார்டிலும் நால் நூற்கும் நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுவருகின்றன. அன்று காலையில் பஜனை ஊர்வலம் நடக்கும். பிறகு சௌபாத்தி கடற்கரையில் கொடி வணக்கம் நடக்கும். சர்தார் படேல் கொடி ஏற்றுவார். தொண்டர்களும் தேசசேவகிகளும் ஆங்காங்குச் சென்று கொடிகளை விற்பார்கள். மாலையில் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடக்கும். இதற்காகத் தனியாகத் தொண்டர்படை திரட்டப்பட்டிருக்கிறது. ஆலைத் தொழிலாளர்களும் அந்த நாளில் தங்களுக்கு விடுமுறை வேண்டுமென முதலாளிகளைக் கேட்டிருக்கிறார்கள்.

### அகில இந்திய மாணவிகள் மகாநாடு

#### லக்ஷ்மணபுரியில் ஏற்பாடு

அகில இந்திய மாணவிகள் மகாநாடு ஜனவரி 20, 21-ந் தேதிகளில் நடக்கும். அம்மகாநாட்டுக்கு ஆதரவளிக்கும்படியும் ஏராளமாகப் பிரதிநிதிகள் வரும்படியும் ராஜகுமாரி அமிர்தகௌரி, ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிதர், மிஸஸ் அஸப் அலி முதலியோர் விண்ணப்பம் விடுத்திருக்கின்றனர். லக்ஷ்மணபுரியில் மாணவர் மகாநாடு 28, 29-ந் தேதிகளில் நடக்கும். டாக்டர் தாகூர், பண்டித ஜவஹர், கனம் சீனிவாச சாஸ்திரி, ஸர் சிக்கந்தர் ஹயத்கான் ஸ்ரீமான் கெர், ஸ்ரீமான் சத்தியமூர்த்தி முதலியவர்கள் இம்மகாநாட்டுக்கு ஆசிச் செய்தி அனுப்பியிருக்கிறார்கள்.

— காரைக்குடி —
ஸ்ரீ ராமவிலாஸம் சினிமா பாலஸில்
19—1—40 முதல் மகத்தான 2-வது வாரம்
P. S. சீனிவாச ராவ், M. A. ராஜாமணி, பேபி ருக்மணி நடித்த
★ ஜெயபாரதி ★
தமிழ்ப்படம்

காரைக்குடி நடராஜா டாக்கிஸில் 20-1-40 ஞாயிறு முதல்
மகத்தான 2-வது வாரம்.
பாபநாசம் சிவன், ஜி சுப்புலெக்ஷிமி முதலியவர்கள் நடித்த
பக்த சேதா புராணத் தமிழ்ப் படம்
முந்துங்கள் இடத்திற்கு முந்துங்கள் ஆயிரக்கணக்கான மக்கள் இடமின்றிக் காத்திருக்கின்றனர்.

Edited, Printed and Published by Raya Chockalingam for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

